ஸ்ரீ

# குணாகரம்

## கவிமணாக்காண்டம்.

இந்நவீனகாப்பியம்

இயற்றமிழ்ப்புலவர் - தூசில்வீரவல்லி

ஸ்ரீ நிவாசையங்கார்

குமாரரும்,

சென்னைராஜதானிவித்தியாசாலையில்

ஸ்வதேசபாஷாத்தியக்ஷரும்

ஆகிய

தூசில்வீரவல்லி. சேஷையங்காரால்

இயற்றி,

சென்னபட்டணம்:

ஊ. புஷ்பரதசெட்டியாரது

கலாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1870

# இயற்றமிழாசிரியர்

ம-ள-ள-ஸ்ரீ,

## திருத்தணிகை விசாகப்பெருமாளையர்

அவர்கள் இயற்றிய

## நிலமண்டிலவாசிரியப்பா



மலர்தலையுலகின் மன்னுமாக்களின்
அலர்தருமுயிர்க்குறு திப்பொருளாமென
ஆன்றோருணர்க்கு மறமுதனான்குந்
தோன்றவமைத்துத் தொல்லியல்வழாமல்
புனைந்துரையுலகிய லெனுந்திறமிரண்டின்
வனைந்துபுலவர்கள் வந்துச்சியின்மேற்
கொளவொருகாப்பியங் கூறுகவென்றே
உளவொருதன்மகன் உணர்த்திடுகல்வியாற்
சான்றோனெனவே தக்கோர்சொலக்கேட்
டன்றபொழுதி னினிதினுவந்தே
பேரறிவுடைய சீரங்கம்மாள்
ஆரவுணர்த்த வருண்மொழிகொண்டே
ஏர்பெறக்குணாகர மெனுமொருகாப்பியஞ்
சீர்பெறவியற்றினன் றிகழ்சோணாட்டில்
மதியகடுருஞ்சி மறுச்செயுஞ்சிகரியும்
சதிதழீஇக்கூத்தியர் சார்ந்தாடரங்கமும்
மணிபலகொண்டு பணிசெய்குட்டிமமும்
அணிபலகொண்ட வருங்கலைபலவும்
மாதவராய்ந்திடு மண்டபநிரைகளும்
ஆதவனஞ்சி யகலுமெழிஞ்சியும்
உலகுதாங்கனந்த னொளிர்முடிமிசையில்
நிலவிவாழ்வுற்றிடு நீணீரகழியும்
புரந்தரனயன்முதற் புங்கவர்கெழுமி
நிரந்தரமருள்பெற நிகரறுமச்சுதன்

அரவணைமிசைப்பள்ளி யமர்ந்துவீற்றிருக்கும்
பிரணவவடிவமாய்ப் பிறங்குபொற்கோயிலும்
பொன்னிமாநதியும் பொலிவுற்றுவிளங்குந்
தென்னரங்கமா நன்னகருறைவோன்
வேதியர்திலகன் வீரவல்லியென்
ஶ்ரோத்ரியகுடிப்பிறப் புற்றநற்றவன்
கனம்புனையுருவுகொள் கண்ணனடியிணை
மனமொழிமெய்களின் வணங்கிவாழ்ந்திடுவோன்
ஸ்ரீனிவாசய்யங்கார் செய்பெருந்தவத்தொரு
மேனிகொண்டிப்புவி மீதவதரித்தோன்
பாஷையின்மிக்குயர் பாவலர்புகழுஞ்
சேஷையங்காரெனச் செப்புநாவலனே.

# சிறப்புப்பாயிரம்.

இஃது

திரிசிரபுரம். மகாவித்துவான்

ஆறுமுகம்பிள்ளையவர்களாலியற்றப்பட்டது.

புயலிலகப்பொழிலிலகும்பொன்னிநதியிருபுடையும்பூவாரத்தின்
செயலிலகவெழிலிலகுந்திருவரங்கப்பெரும்பதிக்கட்டிகழுத்துங்கன்
கயலிலகவிழியிலகுஞ்சீரங்கம்மாளெனுநற்கருணையாளை
இயலிலகமணநதிலகும்வீரவல்லியிருங்குடியுற்றிலகுஞ்சீரோன். (௧)

கந்தமிகும்வாசிகையொண்சரோருகமுங்கதலிககபதியுமானேன்
விந்தைசெறிபுயனலங்கொள்விப்பிரகுலநனிவிளங்கவிரிநீர்வையப்பில்
வந்துதித்தபெருங்கருணைச்சீனிவாசையங்கார்வளமிக்கோங்கும்
இந்நன்னூலியற்றறிஞன்றனைப்பயந்துபெரும்புகழையெய்தாநின்றோன். (௨)

இக்கொழுனனருள்வழியினில்லறதர்மத்தைவழாதியற்றியான்ற
மிக்கபுலத்தவருநனிவியந்துகளிப்பினிதடையவேறுளோரும்
ஒக்கலுமுட்பேதமறவொன்றாகப்பார்த்தொழுகுமூக்கத்தாளை
புக்கரியகலியினுயர்தருமமிந்தப்படிவமெனும்புனிதத்தாளை. (௩)

உலகநிறைபுகழாளையொண்டொடியார்குழூஉநாப்பணணிகொடோங்கித்
திலகமெனச்சிறந்தாளைத்தீங்கணுகாச்சீர்மலிந்ததிறத்தினாளை
இலகுமனைக்கிசைந்தாளையிருசெவிக்குமமிழ்தென்னவின்சொலாளை
மலர்நளினமுகத்தாளையுயிரனைத்துந்தன்னுயிரின்வாஞ்சையாளை. (௪)

[illegible]நிலைதவறாளைநாணாதியகலாளைக்கற்றோர்கூறும்
பொற்புமுதலாறனையும்பூணாகவணிந்தாளைப்பொய்யிலாளை
விற்பனமார்நற்சுதனைப்பெறுமரியதவத்தாளைமேதக்காளைப்
நற்பதுமநாபனடிபணிவாளைக்கருணைபொழிநயனத்தாளை. (௫)

சீரங்கம்மாளெனுநற்றிருநாமம்புனைந்திலகுஞ்செவ்வியாளை
சாரங்கபாணியெழுந்தருடலமுள்ளுவந்ததன்கட்சார்ந்துளாளைப்
பாரோங்குந்தருவினுமொப்புயர்விலாநேர்மைநலம்படைத்திட்டாளை
ஆரங்கவுயிரனைத்துந்தாயெனவேவாஞ்சைசெயுமன்பினாளை. (௬)

இன்னகுணகாநிதியையம்மனையாப்பெற்றதன்றியிணையிலாவிவ்
வன்னையிந்நூற்செய்கவெனவுபதேசித்தருளவஃதகத்துட்கொண்டே
பன்னுலகத்துளவுயிர்கள்படரகற்றித்திடவழியிற்பயிலும்வண்ணம்
மன்னினியதமிழ்க்கவியின்வகுப்பலெனவாய்ந்துளாத்தின்மதித்து மன்றோ. (௭)

## வேறு.

தனுவையொருநாடாக்கித்துவாதசாந்தத்தலத்தையதனகராக்கித்தனியின்
மாவை, மனுவைநிகர்குணகரப்பேராசனாக்கிமறமறமென்றிரண்டினையுமடவா
ராக்கி, வனமெனமுன்கழிபகலைவகுத்தக்கானின்மாயைமுதன்முப்பகையைமா
ய்த்ததாக்கி, வினவருமெய்யுருநெறியைக்குயிலதாக்கிவிலங்குமிடையூறனைத்து
ம்விண்டதாக்கி. (௮)

விண்டுமுடியுறைகல்விதனைநற்பெண்ணா விதித்ததிலாமுதுக்குறைவைவிளக்
கதாகக், கொண்டுகலையுணர்ந்ததனைமணந்ததாகக் கூறியதன்கட்டோன்றிக்கூ
விளங்கி, மண்டொளியின்குவையையொரு மகவதாகவளர்த்துமுடிசூட்டிநீடூழி
யாவண்ணம்வைத்தே, தொண்டுபராபரற்கிழைத்தெஞ்ஞான்றுமின்பந்துய்த்
திருக்கும்வாய்மையினைத் துலங்கச்செய்தே. (௯)

எழுதருபல்சமயக்கோட்கெட்டாதாக வெவ்வகையாமதங்கட்குமுவட்டா
தாகப், பழையனவாம்புராணநிக்கதைகளுங்கற் பனைகண்முதலியாவொன்றும்
பற்றாதாக, மொழிபெயர்ப்பும்வழிநூலுங்கிட்டாததாக முதனூலோர்க்கேவழிமுர
ணாதாக, அழிவினருங்கல்வியொடுஞானமங்கை யாமலகமெனவுயிர்கட்கருள்வ
தாக. (௧௰)

புதியனவாயிக்காலத்துள்ளயாவும் புணர்த்தியறியுறுந்நம்வகைபுகட்டிக்
காட்டி, விதியிதுமாற்றீதெனவேயோராக்கங்கை விளக்கெனவேநூலக்குநெறி
விளக்கிக்காட்டி, மதிவலனும்விதிவலனுமுணர்ந்தேமாய மயங்கறுக்கமாட்டாத
மாக்கட்கெல்லாம், கதிபெறுநன்னெறியிதெனவாராய்ந்தன்பாக் கதிரவனின்
முரணில்வழிகாட்டிப்பின்னும். (௧௧)

இருசுடருமுடுக்கணமும்விண்மண்ணூற்றேயியங்குவதிற்பனமுதலய்வின்
மண்ணேடும், கருவிழியின்சிறுபொறிக்குள்ளடக்கிக்காட்டுங்கட்புலனிலூட்பு
லனுற்கருதற்கெட்டாப், பெருகுபலபொருளனைத்துமிச்சின்னூலுட்பேரமறவ
டக்கிமுன்பின்பிறழாவண்ணம், தெருளாகப்பதற்குறாருமற்றுமவர்போர்க்குந்
சித்தமெளிதுணரும்வகைதெளிவித்தாங்கே. (௧௨)

பன்னூலைக்கற்றுணர்ந்துபயன்றேருமற் பாவியுளார்நிறைகுந்துலைக்குபதறி
யாய்ந்து, கொன்னூலாற்பெறுவதுமற்றியாதெனவேழுரிற் கூடாத்துணையெதனை
யென்றுகுறித்தோருய்ய, முன்னூலும்வழிநூலுஞ்சார்புநூலுமொழிந்துநாமெ
ய்ப்பொருளனைத்துமிதறகட்டோனறு, வெப்நூலுமிக்துங்களொவ்வாதென்ன
வியற்றியுயர்குணகரமென்றியற்பேரிட்டே. (௧௩)

ஓதுகலியுகமொருநாலாயிரத்தோடொன்பானூற்றுறுபத்தொன்பதின்மேன்
மேவும், நிதில்பிரபவவருடஞ்சிங்கமாதந்தேதிபதினெட்டி லெனியமாகத்தன்னி
ல், வேதகுலச்சேஷையங்கார்விற்பன்னவிமலதுயர்கலையுணர்ந்தமிழ்க்கோர்கோ
ட்டுக், காதரவின்ரங்கேசற்றியச்சிற்கேசற்றியம்புவியியவிலைநாட்டியருளினரே.()

பிரிகேட்மேஜராபீஸ் ஹெட்ராயிட்டர்

அஷ்டாவதானம்

**நாராயணபிள்ளை**

இயற்றியது.

உடற்பகுதியுணர்ந்ததனையியக்கும்வளிநிலைமையறிந்துறுமுகத்தால்
அடற்கரியபகைதடிந்துமெய்ஞ்ஞானம்புணர்ந்துபுகழாக்கைவைத்தே
கெடற்கருமின்பஞ்சாரும்வகைசீவரறிந்தெளிதிற்கிட்டவன்பால்
திடப்படுசேவையங்காரியற்றுதுணைகரநூலைச்சேவிப்போமே.

---

# ஞானாகரம்.

## கலைமணக்காண்டம்.

### கடவுள்வணக்கம்.

உலகனைத்துந்தனதகத்தேயொடுக்கியருணிரந்தரவொண்ணொளிபாய்வானும
இலகனிலும்போலவசைவறநின்றேகமாயெதிரீடற்றே
அலகில்பலசமயக்கோட்கதீதமாயுட்புறமுற்றகலாதென்றும்
நிலவநிலகாரணத்தையானந்தசாகரத்தைநினைதல்செய்வாம். (௧)

உற்றறியுமைம்பொறியுமொழிந்துதனையிழந்தநிலையுவந்துதன்னை
இற்றிதுவென்றெவற்றானுஞ்சுட்டுதற்கோரிடம்பேர்மற்றியாதுமின்றிப்
பற்றறுத்துய்பவர்பற்றும்பரம்பொருளைமெய்ப்போதப்பற்றிலாவச்
சிற்றறிவிற்கணித்தாகாச்சதானந்தப்பேரொளியைச்சிந்தைசெய்வாம். (௨)

வித்தகத்திற்பாதவம்போற்றனதகத்திற்சகமனைத்தும்விளங்கித்தோன்றச்
சத்தசத்தென்றிரண்டினுக்குந்தாரகமாயாதினிலுந்தாக்கற்றென்றும்
நித்தமதாயாதியந்தம்போக்குவரத்துமுதெங்குநிறைந்தொன்றாகுஞ்
சுத்தபரிபூரணமாம்பரஞ்சுடரையிறைஞ்சிவினைத்தொடரைநீப்பாம். (௩)

ஒண்டுகில்பொற்பணிசிகரியோவியமட்கலமுதலவுறச்செய்வோரும்
பண்டரும்யாழிசைதரவும்பாவைநடித்திடவுமிசைபண்பினோரும் [ன்
உண்டெனநன்குணர்வதுபோலுலகனைத்தும்படைத்தளிக்கவொருவனுண்டெ
றெண்டருமாபேரறிவிற்கணித்தரும்பரம்பொருளையிறைஞ்சிவாழ்வாம். (௪)

வேறு.

பகுத்தவம்பிரிவிலொருவாய்நின்றொடுங்கவொடுங்காப்பாலியவுததியெனப்
பலவாம்வியூக, மிகுத்ததனுகரணதிதோன்றியொடுங்கிடவும்விபுவாகிநின்
மலநித்தியமாகிமேலோர், தொகுத்துளமெய்ஞ்ஞானநூற்சொலுமளவையினு
நற்சுருதியிற்கூறியவளவையினுந்துலக்கமாக, வகுத்தறிதற்கரியவொன்றைமா
சறுசின்மயத்தைவாசாமகோசரத்தைவணங்கியிறைஞ்சிடுவாம். (௫)

வேறு.

உலகமாங்கனிகள்சூழவோங்குமொண்பரிதியேய்ப்ப
அலகிலாவொளிகளாருமருங்கினையொருங்குதாங்கி
இலகுபேரருளிற்பேணியிருந்தடிமுடியீறில்லா
நிலைகொள்வான்றருவாய்நிற்குநித்தியன்சரணுட்கொள்வாம். (௬)

சீருறுபுவனந்தன்னிற்செழிக்குமெவ்வுயிர்களுள்ளும்
ஏருறவுறைந்துங்கூறற்கெளிதிலாதகிலமுற்றும்
நேருறநிறைந்துநின்றுநிலையிலம்பொறிகட்கெட்டாப்
பேருறுமீசன்பாதம்பெட்புடன்றலைமேற்கொள்வாம். (௭)

விரிகதிர்ப்பகலோன்முன்னர்வீய்ந்தொழியிருளைப்போலும்
மருவியவறத்திற்கொல்கிவன்பழியகலல்போலும்
பொருமழைப்பெருக்கினோடிப்பொய்க்குலகுரவேபோலும்
ஒருபரன்பதத்தையுள்ளயுளத்திருளொழியுமன்றே.

குருமணிகுயிற்றிச்செய்தகுலவுபூணிடையிற்றோனலார்
கருமணியிழைத்துக்காட்டாகாந்துமங்கனகக்குன்றை
மருவுவகருமைபோக்கிமாழையாம்வண்ணமீசன்
இருபதமலரைவாழ்த்தென்னிதயமுமிலியதாமே.

வானுடன்வளியாய்த்தீயாய்வருபுனல்மண்ணுமாகி
ஆனுமங்கதிராய்த்திங்களாண்டுமுமனைத்துமாகி
நான்முதலைந்துமாகிநண்ணுறுபொருள்களியாவும்
தானுமாயலதுமானதற்பரன்றுணைத்தாள்போற்றி.

## அவையடக்கம்.

அகத்தவனன்புதாங்கியறிவிலாநெஞ்சத்தேனும்
மிகுத்தநன்னெறிவழாதுவெந்துயருறாதுவிந்தைச்
சுகத்தினிதுயர்மெய்ஞ்ஞானக்குணாகரத்தோன்றல்காதை
சகத்தினற்றமிழ்ப்பாவாகச்சாற்றினநாருமன்றே.

கருவுறுமேகமென்னக்கனத்தபாற்கடலேயென்னத்
தருவெனப்பொழியுந்நாலத்தண்டமிழ்வல்லீர்யானே
தெரிவிலியேழைகாணுந்திருவருணோக்கந்தேடி
மருவினேனென்பாலுண்டாமயக்கறுத்தருள்செய்வீரே.

மின்னியன்மழைமேலோடிவிழுமிதைத்துருப்பதன்றித்
துன்னிவெஞ்சுரத்தும்பெய்யுஞ்சொற்சுவையுணர்தூயோரும்
மன்னியதமிழ்நாவல்லோர்மாண்கவிமதிப்பதன்றிப்
பன்னுபுன்சொலிறுற்சொல்லென்பாவதூஉம்பொறுப்பரன்றே.

மலர்களிற்சிறந்தவந்தாமரைமலருடனப்பொய்கை
குலவியகொட்டிநெய்தல்கூடப்பூத்தருபோல்யாரும்
அலகிலாக்கல்விசால்நல்லறிஞர்களவைக்கணுஞ்சா
திலகுமிந்நூற்பாவாய்ந்திங்கியற்றியதாருமன்றே.

வேறு.

உலகமெலாந்தனியாழியுருட்டியரசியற்றவல்லவொருவேந்துற்ற
பலபலவாங்குறுமன்னரரசினையுங்கெடாதளிக்கும்பான்மையேபோல்
சொலவரியகலைநிறைந்தகவிச்சக்ரவர்த்திகளாந்தூய்மையோருந்
தலமுலவுமிந்நூலினவையகற்றியுவந்தளித்தறகைமையாமே.

வேறு.

என்னையான்புகன்றதெற்கேபிழிகைவிளைக்குமாயின்
பின்னையாரதனையிங்கேபேணுவார்பெருமைசேரொன்
அன்னையாருரைத்தமாற்றமாதரித்தறைந்ததாலே
பன்னியாய்க்கவிகளென்றன்பாவையும்பயனுக்கொள்வார்.

வேறு.

(அ)

புவியடக்குமிரும்புலவர்பொருவிலுயிர்பனுவல்தரப்புகுந்தகாலை
அவையடக்கம்புகல்வதுதமரும்புகழ்க்கும்பெருந்தகைக்குமடைவாயன்றே
நவைகிடக்குமிழிமொழியினாலிந்நூற்பாவிணக்குநானோதிந்த
அவையடக்கம்பெருந்தமிழ்க்காடாள்மடங்கற்கவிகளையேயஞ்சிமன்னோ. (கஎ)

## நூல்வரலாறு.

(கூ)

மருந்தாயமனுக்களையும்வசையுரைத்துப்பகைதேடிமறுக்கொணாவாற்
பொருந்தாதபழிவிளைத்துப்புறம்பிகழ்ந்துகறுமனதிற்புகப்புன்னெஞ்சர்
திருந்தாதவிளமதத்திற்றிருக்கானகவிபுனைந்துதிரிந்தகாலை
யருந்தாயென்மருங்கணுகியறிவூட்டவகன்றதகத்தணங்குமாதோ. (க)

(க0)

அணங்கிழைக்கும்வெறும்பாக்களவையிழைத்துநீயடைவதவதூறன்றிச்
சுணங்கிழைக்குங்குரைப்பாகுந்தூயவர்களிடரிழைக்குந்துணிவேகொள்ளார்
இணங்கிழைக்குஞ்செயலீதிங்கினியிழைக்குங்கருத்தெறிந்தேயிலங்குஞானக்
குணங்கொழிக்குமொருநூலைக்கூறமனத்திறைவனடிகொணணியென்றாள். ()

(கக)

என்றாளையிறைஞ்சியிருதிருவடியுந்தலையேற்றியென்பாலீசன்
நின்றாளுந்திறனுரைத்தீர்நெறியுரைத்தீர்நெஞ்சினுக்கோர்நிலையேதந்தீர்
ஈன்றாளும்புசுவென்னக்காயமளித்துயிரளிப்பக்கனிந்ததாயே
உன்றாளையுளத்திருத்தியொருபனுவலிசைப்பலெனவுடன்பட்டேனால். (ங)

(கஉ)

உடன்பட்டவெனையணைத்துங்குச்சிமுகந்தாசியொருகோடியீந்து
கடன்பட்டவறியனுக்கோர்கடவுடருநிதியடைந்தகாட்சிதோன்றத்
திடன்பட்டமனமுவக்கத்தேன்கனிந்தகுரலெடுத்துச்செல்வனேயுன்
மடன்பட்டதெனமகிழ்ந்துமங்களங்கள்பலவுரைத்துவாழ்த்தினாளே. (ச)

(கங)

வாழ்த்ததனைத்தலைப்பொறுத்துமாயமறப்பருதிகளான்மயங்கிச்சீவன்
ஊழ்த்தலையுநிலையறிந்திங்குறுதுயரம்போக்கியுடற்சுமையைப்பாரில்
வீழ்த்திநலமிகப்பொழியுமேலவன்றன்றிருப்பதத்தைமேவுவண்ணம்
ஆழ்த்தமறைப்பொருளுணர்ந்தவறிஞர்புகல்வழிசிறிதிங்கறைவேன்மன்னோ.

(கச)

மன்னுதீவுடலதனைவளநாடும்வான்கலைகளிரண்டும்வாய்ப்ப
உன்னுதமுனையடைந்துள்ளுறுகூடமதனையொருநகருமாக்கிக்
கொன்னுருமுயிரதனைக்குணாகரனென்றுயர்ந்தவொருகுரிசிலாக்கித்
துன்னுதமனுப்பிறவிகடந்துவினைதொலைக்கும்வழிதுலக்குவேனே. (சா)

(கரு)

துலக்கியநல்வழிகாணத்தொலைநாளைக்கானகமாய்த்தொகுத்துநெஞ்சைக்
கலக்கியயரிடுமாயைக்காரரவாக்கிமதத்தைக்களிறதாக்கி
உலைக்கவருபகுதிதனையொருபேயினுருவாக்கியுறுதிகொண்டு
விலக்கியவைபிழைப்பதுவும்விறல்வேந்தன்செயலாகவிரித்ததன்றே. (எ)

(கசா)

விரித்தபகைமூன்றொழியமெய்புணரும்வழிநாடல்வியன்கொள்காவில்
திருத்தமுளபுழையாகத்தெரிந்ததனைப்புறம்விடுத்துத்திண்மைசேர்ந்த
பருத்தகலைபயில்வழியிற்படிந்தபலவூறனைத்தும்படரோர்குன்றாய்
அருந்தியுடனடைகலையையணங்காக்கியவாபனவண்மனைந்தாக்கி. (அ)

மன்னவன்கொடையொடுமாறுகொண்டுவான்
துன்னியவரைமிசைச்சொரிந்ததூமழை
மின்னிடைவிண்மகள்விரிந்தவாயிரம்
கண்ணுடைச்சில்வழிகழுவல்போன்றதால். (௭)

ஒழுகியமழைமலையுச்சிமோந்ததன்
பொழிலுடைபெயர்தரப்புல்லிப்பொன்மணி
விழைவுடனுரிந்ததைவெறுமையாக்கியக்
கழைபுரைபரத்தையர்கடுப்பச்சென்றதால். (௮)

வள்ளறன்கையெனவழங்குபண்ணையும்
உள்ளவுஞ்சுடுசுரமொதுங்குசெய்தலும்
கள்ளவிழ்முல்லையுங்கனவன்பாலையும்
வெள்ளெனவெளுத்தமீவிழுந்தமாரியால். (௯)

எழுநிறம்பொலியவானிலங்குழூரிவில் ‡
முழுமழைக்கொண்டறன்முரணழித்திடல்
பழியெனவுன்னியப்பரிதிவானவன்
தழுவினன்றனுக்கரஞ்சமருக்கென்னவே. (௧௦)

வேறு.

உள்ளுறைந்தவிருளையுரப்பிமீ
விள்ளுஞ்ஞானம்விளங்கியதென்னவே
புள்ளிவாளைப்புணர்ந்தமுகிற்குலந்
தெள்ளியோடத்தினகரன்சீறினான். (௧௧)

வேறு.

சாகமீதுறைதருதண்டுளிக்குலம்
மாகமீவிரிசுடர்வழங்குகாந்தியின்
வாகுபன்மணிவயின்வயங்குமாறுபோல்
பூகமீக்கொடுநிலவொளித்ததெங்குமே. (௧௨)

வேறு.

புனிதமாந்தரைபோன்றதுபுதுப்புனல்வீக்கில்
புனிதமாந்தரைப்பூரணன்குணக்கடலாகும்
நனையகத்தனதண்டலைப்பரப்பெலாநளிர்கொள்
நனையகத்தனநண்ணிழனயக்குறுந்தருக்கள். (௧௩)

வென்றிமால்வரைவீறுபல்கால்கொடுவிலகி
ஒன்றுசேர்ந்துமுதலினார்கலியொறுத்துத்
துன்றுவான்சுடர்த்தூமணிக்குலங்களைவரன்றிச்
சென்றுமுல்லையைச்சேர்ந்ததுதெய்வமாநீத்தம். (௧௪)

‡ வில் - எழுவாய், இலங்கும் - பயனிலை.

ஆரம்பாடலுமகிலொடுகேசரமலரி
நாரமாலதிநாகரிமருகுபுன்னாகம்
வேரிசேமரம்வேய்கருங்காலிவெண்டேக்கு
தூரிற்கொய்துகொண்டேகியதூயநல்வாரி.

மருதவேலியில்வாழுநர்வன்சிறைசெய்போ
தருகுசிந்தையருறுபணையுழக்கிடுமோதை
பெருகுநீம்புனற்பேரொலியவிப்பமீப்போந்து
திருகுகைம்மலைத்திறத்தினிற்சென்றறுசீறி.

இடித்தசுண்ணமுமேலமுங்கோட்டமுமிபமும்
வடித்ததேன்மலர்வளைகளும்வயின்வயின்மணியும்
அடுத்தசந்தையிருவணம்பரப்பியவமரத்
தொடுத்தபுள்ளினந்தொகுபொருள்கொள்வரிற்றொடரும்.

கதலிதெங்கொடுகமுகமுமுந்துறக்காட்டிப்
பதலையேங்கியவென்னவப்படுநிலையொலிப்பத்
திதலைமேனியரின்னிசைத்திறமெனத்தெரிய
விதலியோடலின்விழவணிகமுந்தயமிசீர்.

சிதறிமென்பொடிசேறலுந்திரைவிரிற்சிந்திப்
பதிமருங்கிடைப்பழனங்கள்பனிப்புறப்படிவ
மதிநுதற்சிறுமடந்தையர்வதுவையில்வாரி
பொதியவீசறுமஞ்சனீர்ப்பொலிவினைப்போன்ற.

சாலிசெந்நெலைசொன்னலின்செங்கதிர்தாங்கி
வேலிகாவலர்வியப்புடனருச்சனைபுரியா
மாலிமாலிகைமலர்ப்பலியார்த்தியாவழங்கு
சீலரிற்கொடுசேர்த்தநறுநெய்தலிற்செறிநீர்.

பெருகுதேனிறாற்குறிஞ்சியிற்போந்திடுங்காலும்
முருகுதண்டலைமுல்லைவிட்டிகலுமாகீரும்
அருகணிப்பரப்பகலுநன்னிரும்வந்தலவுநர்
தருமிறைகொளுந்தராபதிசான்றநற்றண்ணீர்.

தாணியைக்குவைதருமணிச்சரக்கினைத்தாங்கிப்
பேணமுற்றநற்புனலிடைப்பெயர்மரக்கலங்கள்
ஊனமற்றவிந்நாட்டினிலுறுபொருளனைத்தும்
தீனமிற்றுகத்துறைதொறுந்துறைதொறுந்தெளிக்கும்.

தேவரட்சைகொளிறைமகன்றிருப்புயத்தவிர்ந்த
பூவரட்சியைப்போன்மற்றுநனியிடைப்பொலியுஞ்
சீவரட்சணைக்கேதுனதீம்புனல்பெருக்கச்
சீவரட்சிகையெனப்பெயர்தழைத்ததத்தீர்த்தம்.

பூத்தபொன்விளைநாடெனும்பொலங்கொடிபிறங்க
ஏற்றமாமலைமுலைவழியெழுந்தசெம்பீரில்
நோற்றபாலனைநுகர்வுறலூட்டினள்வளர்த்தாள்
கோத்தன்கன்றினைக்குளிர்ந்தினிதருத்துவபோன்று. (உச)

ஓரிடத்துநின்றுடலுறப்பரந்துமீண்டவனே
சீருறுத்திடச்சேருசெஞ்சோரியேசிவணக்
கார்நிறக்கடற்றுறந்துமீட்டதனிடைக்கரப்ப
வாரிபுக்கதுமல்லலம்பாரிடைத்தவழ்ந்தது.* (உரு)

இத்துணைப்பொலிவியங்கியவ்வளக்கரினைத்துத்
தத்துமாநதிதன்னுயிர்நிலையெனத்தவழப்
பெற்றநாட்டினற்பெருநலஞ்சிறுவரைபிறங்கச்
சொற்றன்மேவுவாஞ்சொல்லணையருள்கொடுதுணிவாய். (உசா)

## நாட்டுப்படலம்.

### வேறு.

வில்லொடுவேல்வாளேந்திமுருகியங்கறங்கவெற்பர்
வல்லியம்புல்வாயெண்குவன்மனைமடித்தநாளும்
அல்லிருட்பூட்கைவாரியடைத்திருலெடுக்குமாற்றால்
சொல்லுநற்காலமெல்லாஞ்சோர்வின்றித்தொலையுமாதோ. (க)

கந்தவேர்கல்லிக்கானிற்கனிமலர்கிள்ளிக்காம்பு
தந்திடுமகணிற்கூடைதட்டுவட்டிகைகள்வேய்ந்து
சந்தனக்கலவைகூட்டித்தகைமணிச்சுப்பையீட்டி
சுந்தரக்கொடிச்சிமாதர்துன்பொழுதகலுமன்றே. (உ)

கதிர்மணிமிளகுகோட்டங்கனத்தசெஞ்சாந்துகாந்தம்
வெதிர்புனையிறவைசுண்ணம்விரும்புதக்கோலமேலம்
பதிநுதற்குறத்திமாதர்மலர்ச்சிரம்வெரிநிற்றுங்கி
முதுபணைமாக்கள்கொள்ளமொய்யரிக்களிப்பர்மாதோ. (௩)

விளைவுறுமலையின்சாரல்விங்குதண்டலையினுப்பண்
அளைகயமலரின்செப்பத்தம்புயமலர்ந்தாலென்னக்
களையிணையகற்றியூக்கங்களிப்பிணையளிக்கவல்ல
திளைகனிபடர்ந்தகாப்பித்தேமரந்தெரியுமாதோ; (ச)

ஆனிரைமேய்க்குமாயரமலையுமனிச்சமேனிப்
பானலங்கனிந்தசொல்லார்பயிலுசாதாரிப்பண்ணும்
தேனினமுரன்றுபாடுந்துழனியுந்தீம்பைவேயின்
கானமுநாளுமாறுக்கடிகமழ்புறவமன்றே. (ரு)

---

* உலகின் மழைநீர்ச்சுழற்சிக்கு உடலின் இரத்தச்சுழற்சியுபமானம்.

காலியிற்காலைமாருங்காரிகையாருங்கூடிப்
பாலினிலட்டசெந்தீம்பாளிதமருந்திப்பாங்கர்ச்
சோலைபூந்துணர்கள்கொய்துசுனைகுடைந்தாடிச்சூடி
மாலைவாய்நிரைகளோட்டிவாழ்மனையதனைச்சார்வார். (௬)

தேக்கொடுசந்தம்பாலைசெம்மரக்குவடுகுன்றின்
மீக்கடிதிறக்கிக்கைம்மாவிடப்புகைச்சகடந்தேற்றிப்
போக்கிநன்னகரந்தோறும்பொலிபொருளீட்டுமாக்கள்
வீக்கியகானநாடிவில்வலர்நெருங்கிமொய்ப்பார். (௭)

புலிநகமயிணம்பீலிபுகர்முகக்களிற்றின்கொம்பு
மலியிருலரக்குசேந்தேன்மற்றுளபொருள்கண்மாற்றிச்
சிலைநுதற்கானமாதர்செட்டிடைவணிகர்நம்பால்
விலைபொருபண்டநேரவேண்டினர்மேவுமாரும். (௮)

கானிடைமஞ்ஞையாடக்கயத்திடையன்னமாடத்
தேன்மலர்க்களிவண்டாடச்சேற்றிளமயிடமாடச்
சானகப்புருவநல்லார்நடந்தொறுங்குரவையாடப்
பானலுட்கணிந்தேயாடும்பான்மையும்போன்றதம்மா. (௯)

வேறு.

மந்தைகட்டிமலார்தழைவல்லெருத்
தந்துழக்கித்தடமபுனல்பாய்ச்சியே
உந்தலங்கொடுழுதுகொழும்பரல்
சிந்திநாறுந்தெரிந்துநடுவரால். (௧௦)

புற்களைகொன்றுபோகங்கனிதர
விற்கைமன்னறம்வேட்டையிரேம்புமா
வற்களைகொன்றுவான்பயன்றம்பெற
நெற்பயிர்நிலந்தோம்புவர்மள்ளரே. (௧௧)

களைகளாயக்கடுகுநுளைச்சியர்
வளைமுரற்கரம்வாய்மலர்மைவிழி
முளரியாம்பல்முருகுகுவளையென்
றளிகண்மொய்க்கவலமருவாரரோ. (௧௨)

கையிளைப்புடைத்தார்க்கருங்கவணையிற்
தெய்யுமுண்டைவில்லெய்துகிளிகோகிலம்
வெய்யபீலிகிரியுங்குருகினம்
செய்யிலோட்டிச்சிறுவர்திரிகுவார். (௧௩)

முட்டைநீங்குருகின்மூளைத்திளந்
தூட்டமாக்கள்செயலிற்றுளிர்த்தலை
கிட்டமன்னரொனப்பொறையேற்றநம்
விட்டநல்லோர்விதத்திற்பணித்துயால். (௧௪)

அரிகுயங்கொண்டறுத்தவரிச்சுமை
பெருகுநன்னீர்ப்பெரும்பணைபோக்கியே
உரைகளத்தினிறுக்குமுழுநர்தம்
நிரைகணிக்கவோர்நேர்மையுண்டாங்கொலோ. (௧௫)

வியரரும்பமுகத்தின்விரற்கரம்
கயரணைந்துகளத்தரியோச்சுவார்
செயிருநீங்குதிலமுந்துவரையும்
பயருமுந்தும்பகட்டினடத்துவார். (௧௬)

கொண்டைச்சோளமுங்கொள்ளுமுதிரையும்
தொண்டைவாய்ச்சியர்தூற்றுவதூமணி
பண்டைப்பற்றறவீசிப்பரன்பதம்
கண்டஞானிகடுத்தொளிகான்றவே. (௧௭)

நவமணிக்கணலங்கிளர்குன்றென
நவமணிக்கணலங்கிளர்போரெலாம்
குவியும்பாலைக்குறுமணலாமெனக்
குவியும்பாலையக்கோதும்பதருமே. (௧௮)

படருமாழைப்பலாசக்கவரிவர்ந்
துடலுராயவுறுகனியங்கையில்
குடலையேந்திக்குறுகுஞ்சகடமீ
விடலைமார்கள்விடுவரங்கோர்புறம். (௧௯)

கருவுகொள்ளக்கருகுமரம்பையும்
முருகுகன்னலுமூலமுமுந்தவே
யுருகுமூக்கத்துழுநர்குழியிடை
பொருவநாட்டிப்பொலிவரங்கோரயல். (௨௦)

கால்கள்தொட்டுக்கரீரக்கொழுமிசை
வேலிலைக்கொடிவிக்குவரோர்புடை
தோலிளுயதளைதொடுத்தேடகப்
பாலிறுப்பர்பழையரோர்பாலரோ. (௨௧)

தாதுமூலந்தருவினமவ்வினப்
பேதமியாவும்பிறங்கவறிந்திடும்
காதல்தூண்டுகவலைமனங்கொளாக்
கோதில்ஞானக்குரவர்திரிகுவார். (௨௨)

அன்னங்கண்படுமண்டிநெற்போரிடை
உன்னங்கண்படுமோங்குநீர்யாணையின்
கன்னங்கண்படுங்காமர்வண்டாயிழைச்
சொன்னங்கண்படுந்தூய்வரன்றேளரோ. (௨௩)

கள்ளுகுக்குநற்காவிரிபூக்குணர்
புள்ளுகுக்குநெற்பூங்கதிர்பாளைவாய்
உள்ளுகுக்குமினிமையுறுந்தெறல்
எள்ளுகுக்குமெறிசமழெண்ணெய்யே.

வள்ளைகாட்டும்வனிதையர்வார்செவி
கிளைகாட்டுமவர்மொழிக்கேகயக்
கொளைகாட்டுங்குளிர்நிழலோதிமப்
பிள்ளைகாட்டும்பெறுதற்கருநடை.

தாய்க்குரங்கின்றடங்கைபடங்கிய
தீக்கரும்பைதிருகிக்கவர்ந்துகொண்
டேய்சகுமந்தியிளவலைஈன்றுபோய்
வாய்க்குதப்பிமருட்டி விழிக்குமால்.

வண்டுமொய்க்குமலர்த்துணர்கின்னியே
கெண்டையேய்க்குங்கிளர்விழிக்கோதையர்
கொண்டைசூடிக்கொழுநர்கரந்தழீஇத்
தண்டலைக்கண்டகைபயுலவுவார்.

தற்கடைமைதவறில்தலைமகன்
ஒக்கதாதையுடற்சுமையோம்பியே
பக்கல்வீழும்பழைமரமீன்றகீழ்
பொக்குநீங்கிப்பொலியும்பொழிலரோ.

வேறு.

காலின்முழங்குறுமார்கலியொத்தசைகாலநறுந்துயிர்கொள்
சாலின்முழங்கினமத்தொலிபம்பியேசாலமுழங்கினவென்
சோலவளைக்குலமேமுழுநுண்ணிடைகோலிநுடங்கிடவே
மேலணையிற்றருகிண்கிணியெங்கிடமெல்லியர்கைபயர்வாய்.

பார்கிழியச்சகடேர்தருபேரொலிபம்பியசங்கொலியே
நீர்கிழியப்புனைதமேதியினேறுதனன்னீன்முகிலோதைகமழ்
தார்கிழியக்குடைவண்டரவந்தகர்தாக்கியபேரரவம்
வேர்கிழியத்தருகிரின்முழக்கொடுவிம்மிமுழங்கினவால்.

யாழினரம்பிசையேழையுமென்விரலாற்றடச்சதி
கேழ்கிளர்வண்டலர்போய்விழுமாசெழுநோக்கமும்போய்விழவே
வீழுநறுந்தெறலாமெனவாய்மலரின்னிசைவிண்டிடவே
சூழுமனஞ்செவியாய்வழிதுய்த்தறுதோமறுகானமரோ.

பண்டிகருநற்றொழுமண்டுபொடிப்படைபாரிடைமுடியதர்
கண்டுநடக்குநர்வண்டினையொத்தவர்கண்கள்புதைந்தலைவ
றுண்டுகள்கொற்றரிகொண்டுநடற்றுவிலாழியிழுங்கிடவே
வண்டிகளைக்கடவாரணமாமதமழையின்வழுந்துவரால்.

காலைமுழங்கியவேயொலிகொம்பொலிகடிகமழ்பூவிரியும்
சோலைமுழங்கியபுள்ளினினத்தொலிதோகையரியாழொலியும்
ஆலைமுழங்கியபேரொலியும்மிளவாடவர்தந்தொலியும்
வேலைமுழங்கியவெவ்வொலியின்னிடைமேவிமயங்கினவால். (௩௩)

திண்ணியநற்றெழிலேபொலிவுற்றலிற்றீத்தொழிலில்லையவண்
புண்ணியமொண்பயிர்போறறிவளர்த்தலிற்புன்மையுமில்லைபுசழ்
எண்ணியமேம்பொருளேற்பனவல்லதுஎண்ணமறந்தொருகால்
பண்ணியதீமைமனக்கொளினுந்தருபனுவலுமில்லையரோ. (௩௪)

திட்டையிடுஞ்சிறுகுன்றுகள்சூழ்தரசேணிநிமிர்ந்துருவும்
நெட்டைநெடுங்கிரியென்னவிளங்குவநெல்லின்மலிந்தணுகி
யிட்டடர்போரினிடைப்படர்வானிலங்குமுகிற்றடவ
முட்டிவளர்ந்தகைதொட்டணிமேவுவைமொய்த்துயர்போருமரோ. (௩௫)

வாசநறும்மலர்கேசமலிந்திடமையகல்மங்கையர்வாழ்
கேசவழுதுறுதாமமணிந்ததங்கேள்வருடன்கெழுமீ
வீசியவாலிடுபாசமெனப்படர்வீழினிணைத்தவிசின்
ஊசலிலாடுவர்ஆசையின்மூழ்கியவுள்ளமுவந்தெழவே. (௩௬)

வீதமுறைப்படிகோதறுபாடிளவேளைமுடித்தொருகால்
ஆதவனுஞ்சிரமீதெழுபோதவனழலினொதுங்கியெழும்
காதலுறத்தமகாதலரன்பொடுகடிகமழ்காவிடையே
சீதநிழற்றரமீதெழுவோகையில்தெள்விளிபாடுவரால். (௩௭)

மாதிரமுற்றெழுசீதநறும்புனல்மாதிரமுற்றபல
போதிறனற்றசம்வாகமலிந்திடப்பொங்குகுரப்பணையின்
போகாசீருளிணக்கியிணைத்திடுதாம்பின்வழிக்கொடுபோய்
தீகறமல்கவளங்குறைவின்றியேசீரின்மலிந்தனரால். (௩௮)

வேறு.

தோக்குக்கையினர்சுருட்கருங்குஞ்சியர்சோரா
வாக்கினுட்சியர்வலத்தினர்மாசறுமனத்தோர்
தூக்கிலாகவச்சுடிரவைதுருவிடத்துவட்டி
நூக்குவார்பலநுஞ்சிறைக்குருகினமொடியே. (௩௯)

ஆலைவாயிடையஞ்சொலாரங்கையினடைப்பச்
சோலைவாய்க்கழைதுவைபடத்தெறிக்கும்வெண்டரளம்
கோலைவாய்நகைக்குணத்தினுக்குடைந்தனகுறிக்கா
நீலவொண்கணார்நித்திலமன்றெனப்பழிப்பார்.

மாருதத்தினின்மலையின்வீழருவியின்மலைந்த
தேருநற்பொறிநிருகலிற்றிரிதருந்திரிகை
ஆரஃகக்குவையடைப்புறவடைப்புறவளையாப்
போரெனப்பொடிபுறந்தொறும்புறந்தொறும்பொலியும். (௪௧)

நாட்டினிற்கனிந்தநற்பொருள்யாவுநாவூத்துநதிவழிநேர்ந்து
மேட்டினிற்குவிக்குமள்ளர்கண்மாறாய்வேண்டுவநகர்வயிற்கொள்வார்
காட்டுமிநகர்நேர்காருகமுதலாக்கைமலிபண்டங்கள்கதிக்க
கூட்டினர்கொடுபோய்விற்பனைபுரிவர்குவலயமெங்கணுங்கொள்ள. (௧௩)

மெய்யுறுவுறுப்பிறென்றினையொன்றுமெலிவறப்போற்றுவபோலும்
வெய்யநம்முயிர்ப்பின்விடத்தினைத்தருக்கள்விழுங்கிவேறளிப்பதுபோலும்
ஐயநுண்ணறிவிற்கைம்புலனுதவியாக்குமாபோலுமின்றும்
செய்யவொண்ணகருந்தொழில்வழிமருவிச்சீருறச்செழித்தனவன்றே. (௧௪)

மீன்படுவேலைப்பொருளெலாமவணவெற்புறுமொண்பொருளவண
தேன்படுகானப்பொருளெலாமவணதீம்பணைப்பொருள்களுமவண
வான்படுகொடிஞ்சித்தோரணமலிந்தவளநகர்ப்பொருளெலாமவண
ஊன்படுமுயிரிற்றுலங்குவவுலகிற்குயர்வுமற்றுரைப்பவுமுளவோ. (௧௫)

விண்ணிடைத்துலங்குமுடுக்குலநிகரவீதிவாய்நிசியறவெறிக்கும்
நுண்ணியமென்காற்சுடர்விளக்குதவநுண்புழைக்குழைவழிச்செலுத்தி
கண்ணகமலிந்நகர்கிளரளிப்பான்கட்டியகால்படுசாலை
நண்ணினர்மனத்தினயத்தளவென்றால்நாமநூநவிலுவதெவனே. (௧௬)

தண்ணெனுமினியசரக்கவைசேர்த்துத்தாளிப்பத்தம்மிபல்மாறி
துண்ணெனுங்கொடியசரக்கெனவடிப்பார்சூழ்ந்தவைமறைந்திடச்சமைப்பார்
கண்ணினிலொருகற்காட்டுவரந்தக்கவல்வழிமனஞ்செலக்கவர்வார்
பண்ணுவகருமம்பண்ணுவவலிப்பார்பார்ப்பவரதிசயம்படிய. (௧௭)

சீதமேனாட்டிற்செழிக்குநற்றருக்கள்செழிதரநீர்நளிர்செய்து
ஆதவன்தாபமவித்தொளிபடையவாடியிறுறையுளையமைப்பார்
ஏதமில்பருவமாறினுமிகலும்எறிகமழ்மலர்களுங்கனியும்
தீதறயாண்டும்வளர்த்தவைதருவார்செல்வர்கள்நுய்த்தகங்களிப்ப. (௧௮)

பந்திணையிளையோர்பயிலுவரொருபால்பாடுவராடுவரொருபால்
சிந்தனைநூல்வாய்ச்செலுத்துவரொருபால்சீறுவர்போருவரொருபால்
வந்தனைசெலுத்திப்புந்தியருரைப்பவர்செவிபடுப்பரங்கொருபால்
நொந்தனரருகிற்சந்ததமவர்க்குநோன்பொருளுதவுவரொருபால். (௧௯)

வீங்கியதந்துவாயர்தம்வீதிவினைசெறிகலவைமென்சாந்தம்
ஈங்கிவையமைப்போர்வீதியுமிரும்பின்இழைதருங்கம்மியர்வீதி
பாங்குறுவணிகர்தொகுப்புறுவீதிபகருநற்கருமங்கள்யாவும்
ஓங்கியதிறத்திற்செய்குநர்வீதியொவ்வொருநகரினைப்பொருவும். (௨௦)

அச்சுதனமைத்தவமைவுறுபடிவத்தச்சினிலழகளிலரிய
கச்சினிற்றெற்றக்கதிப்பினிற்காட்டுங்கவின்கொளப்பதுமைகள்புதுக்கும்
மெச்சுறுகைநேர்தூரியத்திறத்தோர்விளங்கியசூழலில்வியன்சேர்
உச்சிதத்தினியசித்திரமிழைக்குமொண்ணவபொருபுடையுறுவார். (௨௧)

பற்கலையிளைஞர்பயிலுறுசாலைபண்டங்கணிறைப்புறுசாலை
விற்கலைமுதலாவிறலவர்பயிலுமேதகுமாயுதச்சாலை
நற்கலைநீதிநயக்குறுசாலைநாணயமியக்குறுசாலை
சொற்கலைமுனிவர்சூழ்தருநூல்கடௌக்கறவகுத்தறிசாலை. (உஉ)

நன்னயநாட்டிற்கினைழப்பவையோராநல்விதிபுதுக்குணரனாயன்
உன்னியகருமமுடிப்பவர்சூழுமோங்கியமாளிகையும்பர்
மின்னியசாரத்தியைந்தவொண்செய்திவிடுதருபணிபடுசாலை
அன்னமுநதுகிலுமாதுலர்க்குதவியரும்பிணியகற்றுறுசாலை. (உநூ)

வேறு.

பிள்ளைபாடுவபேசும்பரன்புகழ்
கிள்ளைபாடுவகேட்டவர்நல்லிசை
வள்ளைபாடுவமாநர்கள்வண்டரின்
கொள்ளைபாடுவகோதிநற்கூந்தலே. (உசா)

தாம்புதாழுந்தவறினெய்க்கூவமே
கூம்புதாழுந்துறைமுன்கொழுநர்தம்
வீம்புதாழுந்தமெல்லியருடலூர்ச்
சோம்புதாழுந்தூவாரணந்தூண்டவே. (உ௫)

பகரும்யானைபகடுமெருத்தமும்
தகருங்காடையும்வாரணமுநதரு
புகழில்போரிற்பொருத்திப்புலைநகை
நகருவெங்கணுளையரிங்கில்லையால். (உசு)

உறுநெறிக்கணுழலுறுமாந்தர்கள்
அறநெறித்நவருத்தம்விழைகுவார்
மறநெறிக்கடைநின்றனர்மங்கைமார்
புறநெறித்தருபுன்மையுமில்லையால். (உஎ)

மலைகடந்துநிமிர்ந்தனமாளிகை
மலைகடந்துநிமிர்ந்தனமாமணி
நிலைகடந்துபரந்தனநீணகர்
நிலைகடந்துபரந்தனநேயமே. (உஅ)

ஆடரங்கிவிலாடுவர்கன்னியர்
கோடரங்கிற்குயில்கள்குனித்தென
காடரங்குகமழ்செறிகுஞ்சியர்
சேடரங்குதிரண்டுகளிப்பரால். (உக)

தித்தியாநின்றசொல்லியர்செங்கையில்
உத்தியானத்தலரொனவுன்னியே
பத்தியாகப்பறித்தகுழையெனப்
புத்தியாலுமறிந்திலர்பூவைமார். (௩0)

அளியறுந்திலவார்வமறுந்தில
களியறுந்திலகற்புமறுந்தில
ஒளியறுந்திலவூக்கமறுந்தில
வளியறுந்துவழங்கியசூழலே. (௩௧)

மணமுஞ்சீதமுமென்மையுமாறில
மணமுஞ்சீதமுமென்மையுமாறில
கணமுமோய்விலகால்வளமங்கலர்
கணமுமோய்விலகால்வளமங்கலர். (௩௨)

ஈரவல்லியெனத்துவளின்சொலார்
காரவல்லியெனக்கதிர்த்தோங்குவார்
சூரவல்லிருட்பூட்கைத்துணையவர்
வீரவல்லிருமொய்ம்பின்விளங்குவார். (௩௩)

நாடுபூத்தநலங்கிளர்மாநகர்
கோடுபூத்ததுகோமணிபூத்ததவ்
வீடுபூத்ததுமெல்லியரன்னவர்
சூடுநன்னிறைதூமழைபூத்தவால். (௩௪)

வேறு.

இன்னமாநகரையாளுமிறையவனினிதுவைகும்
சொன்னமாளிகையுமங்கத்துணைவர்கடலைவர்மேலோர்
மின்னுமாமணியும்பூத்தவெயிலெறிமதில்சூழ்கோட்டை
பொன்னந்தாமரையினுப்பண்பொகுட்டெனப்பொலிந்ததன்றே. (௩௫)

ஒப்பிலாக்கருமமொன்றையுஞற்றினரொல்கிச்சாம்பச்
செப்பமாயதனைச்செய்ததிறத்தவர்யாமென்றேறும்
துப்பிலாமாந்தர்போலத்தூயகோபுரத்தைத்தாங்கிச்
சிற்பியால்வனப்புவாய்ந்தசித்திரம்வதிந்தமாதோ. (௩௬)

நிலைக்கலாப்பொருள்கள்யாவும்நீங்கினும்நீங்குறாத
உலைப்பிலாவெறுழ்வாய்த்தும்பருள்ளிடவோங்கிவேலைத்
தலைப்படாமுடித்தபாவைதனிவனப்பொருங்குநோக்கும்
சிலைக்குநேர்நிலையைத்தேரிற்றேர்ந்தவர்தேற்றறத்தன்றே. (௩௭)

காலொளியோளிமீதுகறங்குபுதிரியுநேமி
சூலம்வாள்தண்டுபிண்டிசூத்திரமிவற்றோடோங்கி
பாலினிற்றீயநன்னீர்ப்பழுவத்துட்டோன்றுதோற்றம்
நூலினுழகழத்தின்னோர்நுண்ணகர்பொலிந்தவொத்த. (௩௮)

சிறியவைபெரியமீனிற்சிதைவுறுதன்மையோரின்
வறியவர்வலியோர்தம்பால்வன்றுயருழப்பதொக்கும்
எறிதிரையுச்சிமீதரிவையுணத்தவழும்புட்கள்
மறிபடுவிடங்கர்மாவின்வாய்படமாய்ந்தமாதோ. (௩௯)

ஆதவன்பொழிந்தவெய்யவனல்படத்தடிந்தேருவி
மீதெழுவானைத்தொட்டமெய்ம்மதிற்கடக்கவொல்லாத்
தீதறுதிவலையாகிச்செல்லெனத்திரண்டுமின்னிப்
பூதலத்திறைவன்கைப்போறபொழிந்ததுபுனலின்மாரி. (௪0)

வள்ளுடைவைவாள்வீக்கிமருங்கிடைவயவேல்மன்னன்
உள்ளுடையேவன்மேற்கொண்டுயர்மதிலுலவுவீரர்
கள்ளுடைக்கமலங்காவிகயலிவைபுறத்துநோக்கா
நள்ளுடைக்கூந்தலாரைநயந்தனர்மனத்தினண்ணி. (௪௧)

செற்றியம்பதாகைமீதர்விளங்கியவிபத்தினீழல்
சுற்றிபவகழிநீர்வாய்த்தோன்றியதுளக்கநோக்கிப்
பற்றியவுணவென்றேராப்பாழிவாய்திறந்துபாய
முற்றியவெயிற்றைக்கவ்விமுறிந்தனவிடங்கர்மாதோ. (௪௨)

தகரகிற்கலவைதேய்த்துத்தையலார்குளித்ததண்ணீர்
அகழ்வழிதூம்பிற்பாயவமாதருமீனமாந்தி
புகரிழிநாற்றம்போக்கிப்பூமணங்கமழுமென்றால்
நிகரிலன்னல்லார்யோகநிலையினைப்பகரலாமே. (௪௩)

கருங்கலின்விளிம்புகட்டிச்சாய்ந்தசீருணிநேர்ளிசாந்திற்
பொருந்திறனிணக்கிப்போக்கிப்புறம்பெலாம்பைம்புறபேணித்
திருந்துபூவனங்கள்போற்றித்தெவ்வரினணுகவொல்லா
அருந்திறக்காவல்கொண்டவகழ்க்கரைப்பரப்பதன்றே. (௪௪)

இரும்பினிலாயகூடவ்விருகரையிடையுட்டாழ்ந்து
வரும்புழைவழிவாய்மாந்தர்வருகவுஞ்செலவுமாகிப்
பெரும்புனல்வீக்கமீதுபுரள்கொளப்பிறங்கறேறு
மருங்கடைபகைஞர்வாட்டும்வகைபலமறிந்துநிற்கும். (௪௫)

வேறு.

குண்டுறைமுகத்தனகுழிந்தவாயன
வண்டிறற்பணையெனமலிந்துநீண்டன
வெண்டிசையளந்தனவெஃகிருயன
கொண்டலின்முழங்கினகோடிகோடியே. (௪௬)

அழலிடுமாடியினடைந்ததெவ்வரைக்
குழைபடச்சாம்பலிற்குமைக்குநற்பொறி
நிறம்படுகொடியிடைநெருங்கிவிம்முவ
பிழைபடுமவருறிற்பிழைக்கற்பாலவோ. (௪௭)

கல்லுதைத்தெழுப்பவுங்கணைவிற்காய்ந்தன
செல்லுறைந்தெழுமழைத்திறத்திற்றூற்றவும்*
கொல்லுதைத்தெழுபடைகொழித்தற்காயநல்
வில்லுதைத்தெழுபொறிவேறுமுள்ளவால். (௪௮)

---

* பீரங்கி.

வெயிலெறிமதிலிடைவிரிந்துயர்ந்தவிண்
புயமுருடுருடுமியப்பொலன்கொளீர்கோபுரம்
மயறருநோக்குடைமனிதர்யாக்கையின்
இயல்படைந்திவர்ந்தனவிம்பரும்பரோ. (௪௯)

எண்ணியநூல்பலவிறந்துகைவரு
நுண்ணியபுலன்வழிநுழைந்துமேல்வரும்
கண்ணியபெரும்பயன்காட்டுமாக்கடல்
உண்ணுழைந்தறிகுழலுயரத்தோன்றுமால். † (௫௦)

கூடியவுடற்குறுகுணங்கள்யாவையும்
நாடியினயந்தவர்நவிலுமாறுபூ
வோடியவளிதடித்துறைந்தவீங்கின
ஆடியுளுறையசையிரதங்காட்டுமால். ‡ (௫௧)

திசையறிகருவியுஞ்சீதவெம்மையும்
நிசியினுமறிதகநேர்ந்தயாவுமவ்
வசையறுகோபுரநிலைபுள்வைகின
இசையுடைமன்னவனிருக்குஞ்சூழலே. (௫௨)

கதிர்வெயிற்கவருவகொடிகளக்கொடி
முதிர்நிழல்வீதிவாய்மொய்ப்பவந்நிழல்
துதைதருமணிவெயில்துரப்பவவ்வெயில்
மதிநுதல்மடந்தையர்மயிரின்மாய்வவே. (௫௩)

வெண்சுதைதீற்றியவெயில்கொளாடியின்
கண்படுபல்கணிக்கண்கள்காட்டிய
எண்படுவாயிலவிமத்தினுச்சிய
விண்படுகுட்டியமிடைந்தகோடியே. (௫௪)

எத்திறத்தொழில்களுமெழிலுமாமையும்
வைத்தகண்ணேக்கமும்வதனச்சாயலும்
வித்தகன்படைத்தவாவிதியினுக்கிய
சித்திரமேவொளிசிறந்தகோடியே. (௫௫)

கூடங்கண்மலிந்தனகுளிர்ந்தகாறவழ்
பீடங்கணிறைந்தனபெரிதிரேங்கின
வேடவிழ்மலர்கமழெழிலைம்பாலையர்
ஆடலிற்பொலிந்தனவனந்தமாடமே. (௫௬)

வேறு.

கல்விநுடங்கிடைமாதர்களங்கையில்வாங்கிடுமம்மனைகள்
சொல்லியவின்முகநேரொழுபோதலர்துன்னுறுபேடெனவே
புல்லியபோதருவண்டெனவேயிருகண்கள்புறந்தொடர
பல்லவமென்கரமுண்டசமூடொளிபான்மையையொத்துளவால். (௫௭)

---

† நச்சுக்குழல்.
‡ காறறிகுழல்.

மான்மிசைவல்லியினெல்கிமதங்கியர்மாணடிவாங்கிடவே
கான்மிசைபூண்டசதங்கைகறங்குவ கந்துகமங்கவர்சூழ்
நூன்மிசைநிர்த்தமிடத்தருகிண்கிணியோசையுனுங்கிடவே
வான்மிசைபம்புமுகிற்குரலொத்திசைமாமுழவார்க்குமரோ. (௫௮)

மாடமலிந்திணையாடுறுவெண்கொடிவாழ்வுறுசெல்வருழைத்
தேடிமலிந்திவர்சீர்த்தியைநாற்றிசைசெப்பிடுமாதிரிவ
காடுமலிந்தவிர்பாதவமீமிசைகாட்டியபுல்லுருவி
நாடியடுத்ததருக்கிடர்செய்வனநங்குவபோலுமரோ. (௫௯)

விண்ணிறைமீனின்மலிந்தமணிச்சுடர்வில்லிடவெண்டரளம்
பண்ணவமைந்தவிர்பந்தரினின்னிசைபாடுவர்பைந்தொடியார்
கண்ணிநிறம்புரளாடவரங்கவர்கண்ணிணைகாலவயில்
உண்ணுழைவெந்தழலாலுயிர்போய்வருமூசலினூடுமரோ. (௬0)

ஒண்மதிகொண்டனமென்னகளித்திடலுள்ளனவொன்றதுவும்
திண்மைசிதைந்ததுதேய்வதுமாவதுசிகலின்மழுங்கினதால்
பெண்மதியெத்தனையோபொலிவுற்றனன்பேசிடவம்பரமே
வண்மையினெற்கதிர்நீயலையென்றெதிர்காட்டுவமாளிகையே. (௬௧)

மேகமலிந்தனவென்றிடல்வெண்டுகில்மேகமலிந்தளம்யாம்
ஆகமலிந்தநிறக்குலவுண்டெனிலாடிமலிந்தனம்யாம்
பூகமலிந்தவுடுக்களொதுங்குறுவொண்மணிவாய்ந்தனம்யாம்
போகமலிந்தவெமக்கிணைகூறுவபேதமைபோலுமரோ. (௬௨)

இத்துணைவாழ்மனையெத்தனையோபலவெண்ணிலசூழ்தரவே
நத்திடுவெண்சுதைதீற்றியநன்மதில்நாகநிமிர்ந்தணுக
நித்தமுமொண்முரசுற்றதிர்நீணிலைமூன்றொடிரண்டுளவாய்
உத்தமபூபதியுற்றவரண்மனையும்பரினோங்கினதால். (௬௩)

மாதிரமுட்டிவளர்ந்தெழுவாயில்கண்மாதிரநான்கினுளும்
மாதிரமொத்தடைமாதிரமீதெழுமன்னவர்வந்தணுக
மாதிரமுற்றகல்மாணதிபோய்விழமற்றவைகொண்டுறையும்
மாதிரமுற்றிளையாழியெனத்தமவாயின்மடுப்பனவால். (௬௪)

ஒன்னலர்பட்டபடைத்தொழிலுற்றனவோடிமெலிந்தவர்பால்
மன்னவனிட்டவளித்தொழிலுற்றனவண்மைமிகுந்தனவால்
மின்னியவெண்சுவர்மேவியசித்திரமேலவனின்புகழே
மின்னியவன்றிவெருக்கொளவேறுருமேவியவில்லையரோ. (௬௫)

பேசுவர்மன்னுயர்பேரிணையாங்கவன்பேசியநல்லுரையை
பேசுவரொங்கணும்பேசுவர்மற்றவன்பெய்தருவண்கொடையைப்
பேசுவர்நன்னெறிபேசுவர்திண்வலிபேசுவரின்னருளைப்
பேசுவராணையைநாடொறுமங்குளபெட்புறுமாந்தர்களே. (௬௬)

வேறு.

பொன்முடிகவிழ்த்தலான்
துன்னுகாவல்சூழலான்
மின்வடம்பிறங்கலான்
மன்னர்மானுமாடமே. (சு௭)

திரையலைத்தகொடிகளால்
நிரைபடுத்தமணிகளால்
அரிபடர்த்தமீன்களால்
அரிகடுத்தமனைகளே. (சு௮)

மணியிழைத்தமாடமேல்
பிணியினழக்குமொண்கணார்
அணியிழைதிருத்துவார்
பணிமிகுத்தசெங்கையால். (சு௯)

கந்துகங்களாடுவார்
சொந்தகங்கள்கூடுவார்
இந்துவாணுதற்குழற்
கந்தநாறுகோதையார். (௭0)

மழலையஞ்சொன்மங்கைமார்
குழலினூட்டுமின்புகை
நிழல்செய்கொண்மூவென்னவே
உழலுமும்பரோடியே. (௭௧)

கற்றிரண்டதோளினர்
அற்றிரண்டகுஞ்சியர்
மற்றிரண்டமார்பினர்
விற்றிறத்தின்மேவுவார். (௭௨)

செம்மைசேர்நலத்தினர்
பொய்ம்மையில்புலத்தினர்
மெய்மைநின்றமாதரொன்
அம்மையிற்சிறந்துளார். (௭௩)

வெள்ளிவள்ளந்துன்னுகூழ்
பிள்ளைவாயினூட்டுவார்
தெள்ளிருவின்றேறலின்
விள்ளும்வாயினீரரோ. (௭௪)

கலைகள்கற்றுமுற்றுவார்
நிலைநெறிக்கணைற்றுவார்
கொலிவினுற்றகூறுவார்
இலைமுகத்தவேலினர். (௭௫)

பொய்களொன்றுஞ்சொற்றிலார்
மெய்களென்றுமுற்றுவார்
கைதவங்கள்கற்றிலார்
மெய்தவத்தமாதரோ. (எசு)

அருள்சுரந்தவொண்கணார்
வெருள்சுரந்தவேலினார்
தெருள்சுரந்தசிந்தையார்
சுருள்சுரந்தகுஞ்சியார். (எஎ)

மெய்க்கணுற்றமூடியுள்
மெய்க்கணுற்றுநோக்குவார்
உய்க்குமாறுஜீவனூர்
உய்க்குமாறுமுள்ளுவார். (எஅ)

அறங்களென்றுமாக்குவார்
மறங்களைந்துமாற்றுவார்
புறம்பினின்றுபொய்த்திலார்
திறன்மலிந்தசெய்கையார். (எகூ)

படையின்முந்துமொய்ம்பினார்
கொடையின்முந்துகொள்கையார்
நடையிபங்களன்னவர்
தொடையல்துன்னுமார்பினார். (அ0)

ஆறுமாறுகொண்டிலா
ஈறிலீசன்மெய்ப்பதம்
ஆறுமாறுமொண்மனத்
தீறிலின்பந்துன்னுவார். (அக)

நற்றிறத்திவொண்ணகர்
பெற்றகாவல்மன்னவன்
குற்றமற்றவன்குணம்
உற்றவாறுசொற்றுவாம். (அஉ)

---

## அரசியல்படலம்.

### வேறு.

காலலைக்குங்கொடிமாடக்கடிநகரந்தனைப்புரக்குங்கனகமோலி
வேலலைக்குங்கரத்தானைவெயிலலைக்குமணியானைவிளங்குஞான
நூலலைக்குநாவானைநுவலரியகுணத்தானைநுணங்குகேள்வி
யாலலைக்குஞ்செவியானையறமலைக்குமனத்தானையகர்த்தூயானை. (க)

தினகரனைமுழுமதியைத்திருநிலத்தைத்திரண்டமயிர்ச்சியவேற்றைக்
கனவொளியிற்குளிரளியிற்கதிப்பொறையிற்கடுமறத்திற்கவர்ந்திட்டானை
கனைகடலைக்கருமுகிலைக்கழைவிலியைக்கதிக்குமுரட்டறுகட்சீற்ற
முனையடையின்முழுக்கொடையின்முதுவனப்பின்முரணழித்தமூர்த்தியானை.

குலவரைகடிரண்டன்னகுவவுத்தோணெடியகரக்குறிசிறன்னைச்
சலவரையிலொன்னலரைத்தனிக்கதிரோன்பணியவிக்குந்தகையின்வாட்டிக்
குலமணியிலொருமணிபோற்கூவேந்தர்குழுவிடையேகுலவுவானை
நிலவலயம்பெற்றதுவும்நீடவத்தின்வழக்கதுவோநினைதறேற்றும். (௩)

அஞ்சாகும்பகைகாத்துமகங்காத்துமருள்காத்துமறமேகாத்து
மஞ்சாதமுறைகாத்துமன்னுயிரைத்தன்னுயிர்போன்மனங்கொணீதி
துஞ்சாதபடிகாத்துத்துணிகாத்துப்பிணிகாத்துத்துலங்குநெஞ்சத்
தெஞ்சாதகளிகாத்துமிறைமகனுந்திறன்மலியவிருந்தான்மன்னோ. (௪)

நீரோடுவளநாடன்னெறியோடுநிலவலயம்நிறுவியோங்க
நேரோடுகோலோச்சிநிலையோடுமறமளித்துநிற்கும்வேலை
சீரோடுமுயிர்குடிக்குந்திறனோடுந்தீமையதன்கிளைகளோடும்
வேரோடுபற்றறுந்துவெயிலோடுபனியென்னவிளிந்தமாதோ. (௫)

வேறு.

பிணாவொடுபுல்வாயொன்றிப்பெருந்தடத்தருந்துவேலை
உணாவெனவதனைதீண்டாதுறுபுலியகன்றுபோகப்
பணாமுடிப்பார்தளஞ்சுநகுலமும்பாங்கர்மேய
குணாகரனெனுமாவேந்தன்குவலயமினிதுகாத்தான். (௬)

அகமெனும்பணையின்வாய்ந்தவன்பெனுமம்புதேக்கிப்
பகரொருக்கல்விதூவிப்பாவமாங்களைகள்போக்கித்
தொகவருஞானம்வித்திச்சுடுகுணப்பிணிகள்தேய்த்துத்
தருமருடழைப்பவீடாந்தண்பலன்கனியச்செய்தான். (௭)

மணியிடையொளியேபோலும்மலரிடைமணமேபோலும்
இணையினூற்பொருளேபோலும்எரியிடைக்கிரணம்போலுந்
துணியிடையிழையேபோலும்தூவிழிக்கருவேபோலும்
புணருடலுயிரேபோலும்பொலிந்தனன்புவிக்குவேந்தன். (௮)

தேரினாற்கரியினாலும்செய்யுளைப்பரியினாலும்
போரின்வாளுழவராலும்பொருவிலாப்படையினாலும்
நேரலர்ச்செகுத்தனீக்கிநிலையினாலருளினாற்றன்
பேரினாலடக்கிப்பேணிப்பெருந்தகையளித்தான்வையம். (௯)

ஊனுண்குபகைஞரின்றியூனங்கொண்டிருந்தவைவேல்
வானின்றுதாரைபில்கவானுண்டவளர்ந்தபைங்கூழ்
மானங்கொள்மடவார்கண்ணேமானுண்டமனிசர்ஞானத்
தேனுண்டுகளிப்பர்மால்செய்தேனுண்டகசடர்யாரோ. (௧௦)

# காபுகுப்படலம்.

வேறு.

அந்தமானவனவனியையொருகுடையாண்டு
வந்தநாளினில்மணம்படுமறுக்கமொன்றடைய
இந்துவாணுதலிளங்கொடியன்னவர்மருங்கின்
உந்துசாமரையிரட்டுறவுயரவையகன்றான். (க)

அருகுமங்கையரம்புயவதனங்கள்பூத்த
கருவிழிக்குலக்குவளைகள்கவின்கொள்பொற்றாரான்
முருகுலாந்திருமேனியின்மொய்ப்பவவ்வேந்தன்
உருவமாறுகோள்பளிங்கினுக்கொத்தனன்போனான். (உ)

இருளடைந்தவர்மனமெனத்தினகரற்கிளைத்து
வெருளுமெல்லியின்றிரளெனமேம்பொருள்வவ்வும்
திருவின்மாக்களின்வாழ்வெனச்சேண்மழைபொழிய
கருமுகிற்குலந்திரண்டெனத்தோன்றினகாவே (ங)

சாருமாதரின்சாயலைக்கேகயங்காட்டச்
சோருகூந்தலின்தொங்கலைச்சைவலந்துலக்க
பேருயிர்ப்பினைச்சம்பகநறுமலர்பேண
நேருமன்னவர்விழிகளைநவ்விகணிகர்ப்ப. (ச)

வல்லியன்னவரிடையினைவரிசையின்வணங்க
முல்லையாங்கவர்நகையினில்முதுகணீர்பெருக்க
சொல்லுமாங்குயிறுணிவிழுந்துமரிற்சோர
பல்லவங்களும்பரிந்தவர்படிவத்திற்பணிய. (ரு)

காந்தளன்னவர்விரல்கண்டுகாந்தினகரிய
பாந்தள்பின்னியபணிச்சையிற்பதுங்கினபாழி
பூந்தருக்கடம்பொலிவினையிலைகொடுமறைத்த
பூந்துகிற்படாம்போர்த்திளம்பூவையர்போக. (சு)

பொன்றுஞ்சாகத்தர்புனைகுழற்காடுசென்றடரப்
பொன்றுஞ்சாகத்தபெருவனம்வாய்விடப்புழுங்கி
நின்றஞ்சாவரனேர்ந்தனநிகர்த்தபுட்கறங்கல்
நின்றஞ்சாவரனேர்ந்தவர்முழங்கினசதங்கை. (எ)

கூந்தலம்பனைக்கொடியெனக்குலவுறக்குயில்கள்
ஏந்தலித்துறையெழுகெனவின்னிசையியம்ப
மாந்தருக்கடந்தளிர்கொடுவனவளங்காட்டப்
பூந்தருக்களும்பொரியொடுபொற்பொடிபொழிய. (அ)

தாதளைந்தினவண்டுகடண்ணிசைபாட
மாதுளந்தருவளங்கெழுநித்திலம்வழங்கப்
போதலர்ந்ததேம்போம்வழிப்பில்கிடப்பெரிய
சீதநற்குடந்தெங்கிள தெரிவைநின்றேந்த. (கூ)

தங்குகாசையந்தளைவிரிதூசெனச்சமைய
பொங்குகாலின்மென்றுணர்கெழுகவரியிற்பொலிய
வெங்குஞ்சண்பகச்சுடரவிழ்விளக்கினின்றிமைப்பத்
திங்களன்னவன்றெளிபுனற்றடத்தருகடைந்தான் (கo)

வாவியம்பலத்திவலையிற்களையினைமடுப்ப
மேவுவீயினம்மங்கலவாச்சியம்விளக்க
பாவுதாமரைகரமசைஇப்பகர்புகழ்க்காசே
வாவெனின்புறவன்பினின்றழைப்பதுமானும். (கக)

வெயிலொளித்தவிர்சோலையின்வெவ்விருளாலோ
குயிலொளிக்குமென்குதலையர்மதிமுகங்குறித்தோ
அயில்பிடித்தவேளண்ணறன்வண்கரமறிந்தோ
கயமதிற்றருகஞ்சமுமலர்ந்திலகாண. (கஉ)

வேறு.

விரிதருகுவளையும்விரைமென்முமரைப்
பரிபுரமொலிதருபாதப்பாவையர்
அரிமதர்விழிகளுங்கரமுமண்மிய
வருவிருந்தோம்பிடுமாண்புகொண்டது. (கங)

அமுதமென்குதலையரதரமன்னவம்
குமுதமென்மலர்செறிகொள்ளைகொண்டது
தமிழினேரினியசெந்தேறல்தாங்கிய
உமிழுறுமரத்தமுமுள்ளினுற்றது. (கச)

கிள்ளையங்குதலையர்கிளர்ந்தவார்செவி
வள்ளையங்கொடிபடர்வரிசைவாய்த்தது
கள்ளமென்னோக்கினைகண்டகெண்டைகள்
துள்ளிவீழலையிடைச்சுரித்ததன்மையது. (கரு)

ஆமையுஞ்சங்கமும்அடர்வராற்களும்
நேமியம்புள்ளுமந்நேர்ந்தமங்கையர்
காமுறுமவயவம்காணக்காணுருத்
தோமறுசலத்தமிழ்ந்தொளித்தலுற்றது. (கசு)

நீறடர்மீப்படிநெருப்பினேர்தரு
தூறுசெய்கொடியிலைசூழப்பெற்றது
தேறியமனத்தவர்தெளிவுமேயது
ஆறடைகடலெனவாழ்ந்ததத்தடம். (கஎ)

கண்டனனாயனுங்களிந்தசிந்தையான்
விண்டல்மிழிதருவெயிலவன்றொரு
தெண்டரையிருங்கடல்தெரிந்துதோயுமா
ஒண்டொடியவர்புடையொதுங்கமேவினான். (கஅ)

வடங்களும்பணிகளுமல்குநீரிடை
நுடங்கியகொடியுடனுடங்கநொய்தினோர்
மடங்கியவெறியலைவரிசைமோதியே
தடங்கரைபுரள்தரத்தமியளாடினாள். (௧௯)

சீலஞ்சுறும்புனற்படிந்துசீரிழைத்
தூலவெண்டுகில்கொடுதுவட்டித்தூயவான்
கோலவொண்கோசநல்லாடைபோர்த்துமேல்
கூலமென்கரையுறுகுழுவினெய்தினாள். (௨0)

பணியிழைத்திருபுடைபடர்ந்துமேவிய
மணியிழைக்கொடியனார்வதனநோக்கிநீர்
திணிகணிச்சுழல்வாய்ச்சேய்மைபொம்மெனப்
பணிபொறுத்தன்னவர்பரிந்துபோயினார். (௨௧)

அவ்வழியவர்செலவறிந்தமன்னவன்
இவ்வழியெதிர்ந்தவோர்கொடியுளீண்டினான்
செவ்வழியாய்ந்தறிதிறத்திற்சிந்தையோ
டெவ்வழியுய்துமென்றினையவெண்ணினான். (௨௨)

வேறு.

என்முனேயொண்ணிலார்ஈறிலாவுலகிடை
நன்புகழ்மேயினார்நவையிலாத்தொழிலிழைத்
தென்பதோரொண்ணமென்னிதயமேபோழ்தரத்
துன்பமேகொண்டயான்றுணியுமாறென்கொலோ. (௨௩)

பீடுளார்பேறுளார்பேணினார்புவியடைந்
தீடுளார்யாருளார்என்னவேமன்னினார்
பேடுளான்படையெனப்பெற்றயானிற்றகை
நாடுளேன்நானுளேன்யாதுசெய்வானரோ. (௨௪)

வண்மைசேர்வலியினால்வாய்மைபாற்றூய்மையால்
திண்மைசேர்செயலினாற்சீரினானேரினால்
ஒண்மைசேருநாயினொலொன்றினாலின்றியான்
உண்மைசேர்பணியறிந்தாக்குமாறுக்கிலேன். (௨௫)

தோன்றுவாரியாவரும்தோன்றுமாறுத்துளார்
ஆன்றலாலன்னவர்ஆறுவேறுயுளார்
ஊன்றினாரொண்புகழூன்றினார்மற்றையார்
போன்றினார்வாழினும்போன்றினார்போன்றரோ. (௨௬)

எண்ணருமொருதொழிற்றன்னயானெய்க்கிலேன்
திண்ணமேசெய்குதற்சிதைவுறிற்சிதைகுவேன்
நண்ணயானன்னதையாவரோநாட்டுவார்
உண்ணினைந்தோர்ந்தெனவுள்ளுளைந்துருகினான். (௨௭)

## தெரிவையர்தோற்றுப்படலம்.

வேறு.

இவ்வாறிறையெணமுற்றுளமிருந்தேங்கிடுமெல்லை
மைவார்விழிமடவாரிருவனமாமயில்போல்வார்
அவ்வான்றருமணங்கார்கொலோவகல்பூவினர்கொல்லோ
ஒவ்வாரிணையெனவன்னவனுனமுன்னவருற்றார். (௧)

விண்விண்டெழுமின்போற்கவின்வெயில்விண்டெழுமொளிபோல்
கண்கண்டருமடவார்தமைக்கவனெஞ்சினன்கனிய
பண்கொண்டவர்பரிநதேவருபதிநோக்கினனவருள்
உண்கண்டிருக்குடையாள்முனமொருபூங்கொடிவந்தாள். (௨)

அயிலொத்ததோருருவும்பிணையசையொத்ததோரசைவும்
உயிருக்குடனிலைபெற்றிடவொளிரொண்கணளொல்கி
அயர்வுற்றிடுமிடையாள்பிடியயர்வுற்றிடுநடையாள்
வியர்முற்றியநுதலாள்விசைவிறல்மன்னனையுற்றாள். (௩)

வந்தேனனிமனமுற்றதுன்மறுக்கம்படமாய்ப்பேன்
நொந்தேயயருளமாழ்கலைநுவல்வன்களிதருவ
வெந்தேபடுமரவிற்கொருவிதிகாட்டியவழிபோல்
தந்தேனுறுதுயரட்டுயத்தனியின்புறுமருந்து. (௪)

பிந்தாவருபிறைவாணுதல்பரிந்தேயயல்நிற்ப
வந்தாரிருவளமாதரில்வலிமுந்துறவந்தாள்
சிந்தாகுலமுறுவானுழைசேர்ந்தின்னனபன்னி
நொந்தாய்மனம்கவலென்னெனநொடித்தானறம்பிடித்தான். (௫)

நடைபெற்றுயர்முடிமன்னவர்நலமுற்றியமரபில்
குடைபெற்றவர்புடவிப்பொறைகொண்டேனவர்கொண்ட
சடைபற்றியபுகழும்மிணைதனியற்றதோர்செயலும்
உடையற்றனனெனவேயயர்வுழல்கின்றனனென்றான். (௬)

தேடித்தருபொருண்முன்னவர்தெரியேனனிபெருகும்
நாடிப்படர்வழியொன்றையும்நாளுவரசாவேன்
வாடிக்கலுழ்மனதேங்கினன்வந்தீர்வலிதருகக்
கூடிற்றெனிலுறையீரவைகுறிக்கொள்ளுவலென்றான். (௭)

அம்பிற்படுமுழையொத்துளமயர்கின்றதிங்கறிவும்
கம்பித்தெழுகடலிற்படுகலமொத்ததுகழற
அன்புற்றருள்புரிவாணிவளுரோவலிதடைந்தீர்
துன்புற்றுழல்மனதிற்கொருதுறையுண்டெனிற்சொல்வீர். (௮)

என்றேயிவையிறையோதிடவெதிர்முந்தினள்சொல்வாள்
நன்றேதருமுளையாடுவல்நவையில்புகழ்நயந்தோய்
இன்றேயுனதிதயங்களிநனியெய்துவையெழிலோய்
குன்றேபுரைதோளாய்செவிகொடுவென்றனள்கூறும். (௯)

# தீவினைசூழ்ச்சிப்படலம்.

வானிற்படுபறவைக்குலம்வைப்பிற்படுமிருகம்
மீனிற்படுகடலென்றிவைவெயிலிந்துவுமுடுவும்
கானிற்படுதருவுள்ளனகிரியுள்ளனகழறக்
கோனிற்படுமுயர்மானிடங்கொள்வானமைந்தன்றே. (௧)

மண்வாழுயிர்பொலிவுற்றனமதனன்னருள்வழியே
பெண்வாழ்துணையிலமற்றவைபெருகும்வழியுண்டோ
கண்வாழுலகுளமாநதர்கள்கலக்குந்தொழிலொழியின்
விண்வாழ்நறவுண்பார்வெறுங்கலநக்கினவிதமாம். (௨)

துறவுக்குயர்சொல்வாருயிர்துறவுக்குறிசொல்வார்
மறமுற்றவர்வழியேபிறர்மனம்வைத்தவர்வாழார்
புறமுற்றியபுடவிப்படுபெருமானிடரெல்லாம்
அறமுற்றிடுவழியாமவரறமுற்றியவழியே. (௩)

விரிவானதில்பரனென்றொருவிமலன்னுளனென்றும்
எரிவாயிடைபுரிவார்மறமிடுவானவனென்றும்
கிரிமாமுதலணிமாவரைகிளர்வாருளரென்றும்
தெரியாருனைகிறியன்னதுதெரிவாயுயரறிவோய். (௪)

மண்ணுற்றதுமண்மாய்ந்ததுமண்ணேயெழுமல்லால்
விண்ணுற்றதுவெளியேயொழிவேறுற்றதுமுளதே
கண்ணுற்றதுமனமுற்றலகாணுதவையுறுமோ
எண்ணுற்றதுமிகவல்லதுபரமென்பதையெறிநீ. (௫)

எண்ணுவுயிர்படைப்பானொருவிறையுண்டெனிலினிதாப்
பெண்ணுணுடல்கலவாமலேபிறப்பேன்வகைசெய்யான்
விண்ணுனருதொழிலாமெனில்விழைவுற்றவர்புணர
ஒண்ணுவருமுயிர்மற்றவர்குணமுற்றெனவுரவோய். (௬)

தானேயொருதனிவானவன்றனைவாழுயிர்கருமேல்
ஏனேயவனிடருற்றனசுகமுற்றனவென்றான்
ஊனேபடவுயிரோபடவுழலின்றுயருகப்போன்
கோனேயவனறத்தின்றருகோலேயவன்கோலே. (௭)

அறமென்பதுமளியென்பதுமருளென்பதுமறிவின்
திறமென்பதுந்தெருளென்பதுந்தெரிவிப்பதுதெரியாய்
பிறர்நம்முழைகறுவுற்றிடர்பெரிதாக்குனபிழைப்பான்
விறல்மன்னவவிறல்கொண்டவர்வேண்டின்னதுசெய்யார். (௮)

மதனற்பொருவழகும்நெடுவரையைப்பொருவுரமும்
நிதமுற்றிடுதிருவுந்துணைநிகரற்றதோரரசும்
பதமொத்துயரரசேயினிபதறிக்குலைகுலையேல்
இதமொத்தவர்துணையேகொடுவெற்றிநந்துறலென்றான். (௯)

வேறு.

நின்னெழிலுநின்வலியுநின்னுருவுநின்றிறனுநெடிநீர்வைப்பிற்
பின்னொருவர்பெறுவனவோபெருங்காதற்போரிடையேபொருதற்கேற்ற
நன்னுதலாரவைநடுவேநலமழுங்கிமதவேடன்னாணுட்கொண்டு
கன்னலம்விலிற்றுவிழப்புறங்காட்டிக்கடிந்தோடகாணுய்மன்னு. (க0)

துப்பானநேரிளமைதோள்வலியும்பெருஞ்செல்வத்திரளுஞ்சேர்ந்தால்
இப்பாரிலார்விடுவரின்னிழையாரிளம்போகப்புணரியாடா
தொப்பாமலுடல்வருந்திமனமெலிந்துதவமியற்றுமுலோபரெல்லாங்
கைப்பானகனிமுதிர்ந்தகாட்டகத்துக்கருதுமடக்காகங்காணுய். (கக)

விற்கலையும்விதிக்கலையும்மெய்க்கலையும்மோக்கவழிவிரித்துக்காட்டும்
சொற்கலையுந்துணைக்கலையுந்துயர்ப்படுக்குங்கலையன்றித்தூயகாதல்
நற்கலையையாய்ந்தறியினலந்தெரிந்தமனம்வேறுநாடுமோதான்
கற்கலையபிறகலையைக்காமனூலறைந்தநலங்கருதினென்றாள். (கஉ)

ஐம்புலனுமொருகாலுநந்தப்பெருங்கடலினுடும்போகம்
வெம்பிபிளைத்தொண்டொடியின்வேயமர்ந்ததோள்துயிலுமேலாம்போகம்
நம்புமவள்ஊடல்படநயம்பேசிப்புணர்ச்சிநலநயக்கும்போகம்
உம்பர்வழிகண்டனரோஉயர்தவத்திறுண்மைதெரிந்தொழுகினோரே. (கங)

உண்ணவரும்பெருங்களிப்புமொண்ணறவமன்னுயிர்க்குமோங்குகாதல்
எண்ணவரும்பெருங்களிப்பிற்கிணையுரைப்பதிப்பாரிலெதுதான்கொல்லோ
பெண்ணலந்தோய்பெற்றிபிலாப்புன்மாக்கள்காதறனைப்பெருந்தீயென்பார்
எண்ணவருதணந்தார்க்கேயெரியாகிபிணைந்தார்க்குமினிதாமன்றே. (கச)

பீழிக்குங்கனவதிலும்பிரிந்தவர்கள்பெருங்காதற்பேறேபெற்றார்
ஊழிக்குந்தெவிட்டாதவொண்சுவைகள்உறுவரலாலுலைப்புமுண்டோ
மூழிக்குப்பாற்சோற்றிவிப்பழிபுமுபக்குண்டோமூடரின்ப
வாழிக்குநடுவிருந்தும்பயன்றுய்வாரவருரைபபவகற்றனன்றால். (கரு)

வாழியசுரதநலம்வரிசையடைமாலுனக்கேவளருமாயின்
கேழியபெண்டிலகம்பலமருவிக்கிளர்ச்சியுறுகுரிசில்காண
கோழிபொன்றுபலபேடிகூடிநலமொருமிக்கக்கொள்ளைகொள்ளும்
ஆழிபலநதிகளுடனரும்போகவாக்கிடையமருமன்றே. (கசு)

பெட்பேறப்பிரிந்தவர்கள்பொழுதபடவிரக்குவதும்பெருமநின்பால்
நட்பேறவகங்குழையநறவிதழினணிமாந்திநயந்தகூறிப்
புட்காதறவகாட்டிப்புணர்ச்சிபிடைக்களிப்பதுவும்பெருமூச்சிட்டு
உட்காந்தியுளம்வெறுப்பவுரைப்பதுவும்உணர்ந்தபின்வேறுணர்வுண்டாமோ.

நெஞ்சோடுகுறையோதிநெடுங்காமப்பயிர்வளர்க்குநிலையார்க்குற்ற
துஞ்சோடுமுயிர்காத்துத்துவிபகற்றிக்கனியிதழைச்சுவைத்துத்தூய
நஞ்சோடுவேனயனம்நானின்றுலிதுடைத்தூடல்நலியாயாயின்
மஞ்சோடுமதியோடுவெல்த்தோடுநீயிகத்துவகுப்பதென்னே. (கஎ)

நாணெறிந்துநிறையெறிந்துநலமெறிந்துமெய்ம்மறந்துநயந்தவள்ளத்
தூணெறிந்துநின்னுருவேயுள்ளிருத்தியுருவெளியேயுருகிப்புல்லிச்
சேணெறிந்தாருயிரென்னுந்திறத்திருக்குந்தெரிவையனைத்தேற்றாயாயின்
ஆணெறிந்தசெயல்நாடியார்பிழைப்பமுயலலறையரசவென்றாள். (௧௯)

நினைத்தாலுங்களியெய்தும்மகிழ்வெய்தும்நாட்டத்துநிறுவிநோக்கின்
தினைத்தானும்மனமருவிற்றீம்பாலிற்புரையெய்ததிறத்திற்றோயுங்
கனைத்தாரும்சுரும்படையும்கதித்தாரோய்காரிகையார்களியின்வேறு
எனைத்தானுமுயன்றிடினும்யாருறுவரின்பினுக்கோரொல்லையுண்டோ. (௨௰)

என்போலுமெல்லியர்களெத்தனைபேரேந்தலுன்றனெழில்கண்டேங்க
மின்போலுமிடைதளரமெய்வருந்தியறிவழிந்துமெலியாநின்றார்
கொன்போலுநினக்கெங்கள்குறைநீக்கியளியாதுகொற்றங்கொண்ட
மன்போலுமடவார்கடனியகற்றிமகிழ்விக்கமாட்டாரம்மா. (௨௧)

நிழலிருக்கும்புனலன்றோசீதநிறைந்தினிதாகுநெஞ்சிலன்பு
நிழலிருக்குமவரன்றோநேர்ந்தொருவர்குறையேற்பநீக்குகிற்பார்
நிழலிருக்கும்பைந்தருக்கணெடுகானற்சுரம்படுமோநெறிந்தகூந்தல்
நிழலிருக்குமெல்லியர்க்குநின்னிழலேதுணையன்றிநிழல்வேறுண்டோ. (௨௨)

அயர்விளைக்குங்கொடுந்தொழிலில்அகங்குழையச்சுகமழியவமர்ந்துநாளும்
மயர்விளைக்கும்வழியணுகிமயங்காறுமனங்களிப்பமாதர்வேயின்
புயங்களைப்பக்கலவிவழிப்பெரிதுணர்ந்துபேரின்பப்புணரியாடாய்
நயம்விளைக்கும்வழியிதனைநாமவேற்குரிசிலினிநயத்தியென்றான். (௨௩)

குயில்போலும்பாண்மிழற்றுங்கோதையர்கள்யாழினிசைகூட்டிப்பாட
மயில்போலுஞ்சாயலிளமங்கையர்கள்சதிமிதிப்பமதனனேந்தும்
அயில்போலுங்கண்ணியர்களருகிலிணைவெண்கவரியசைப்பவப்பின்
வெயில்போலுமணாநாப்பண்விளங்குவையெம்மில்லினுக்கேகினைகுவாயே. ()

துப்பாகவிவைபன்னித்துவரிதழினிடைமுறுவறுலங்காட்டம்
தப்பாதுநிற்றைக்கத்தலைவணங்கிமுகங்கோட்டித்தளிர்மென்கையால்
இப்பாரினுனைப்பொருவரில்லையெனப்புல்லவருமிணைக்கநோக்கா
ஒப்பாதவுரத்தவனுமொண்டொடியைதிற்றியெனவுரைத்தல்செய்வான். (௨௫)

ஆறுகவிப்பரபரப்பினெய்வின்றிப்பணியிழைத்தலழகாங்கொல்லோ
கூறுகநின்பெயர்முறையுங்குலக்கொடியிம்மற்றையளார்குறிப்பக்கேட்டுத்
தேறுகவென்சிந்தையெனச்சிலைவலானுரைபகரச்சிறிதுநாணித்
தூறுகவர்மனத்தாளுநுணித்தோர்ந்துவினவினவைதொடுக்கலுற்றாள். (௨௬)

பொருளற்றவேறுமூடர்பாத்தைபெறுமிழிநாமம்புகல்வோர்க்கு
தெருளுற்றவெறுக்கையரோநேடரியபோகவதியெனப்பேர்சொல்ப
மருளுற்றமனம்வருந்தும்வன்றுயருரும்புன்வினைவுமாற்றிமேலாம்
அருளுற்றவின்னலங்களாடவர்க்கேயளிப்பதுமென்னடைவாமன்றே. (௨௭)

அயலிருந்தகொடியாளையன்புளத்திற்படியாளைய கன்றபாரின்
மயலிருந்தமனத்தானைமாற்படுக்குக்கனத்தாளைவன்கண்ணாளை
புயலிருந்தநறுங்குஞ்சிப்புரவலனேயான்புகலப்பொருந்தேனென்ன
புயலிருந்தநறுங்கூந்தல்பொறுத்தியெனமற்றவளைப்புனிதன்கேட்கும். (உஅ)

நிறந்தாங்குமொண்டொடியிர்நிலம்பார்த்துநிற்கின்றீர்நிலத்திரேங்கு
புறந்தாங்குபொற்புடையர்போல்கின்றீர்யாதேனும்புகலீர்பெட்பின்
சிறந்தாங்குபற்படிவிற்றெரிந்தவிந்தத்தளிரியலுநதெரிக்கக்கேட்டீர்
மறந்தாங்குமுளத்தினுறுமய்க்ககற்றமாற்றமுண்டெல்வழங்குமென்றான். ()

## நல்வினைசூழ்ச்சிப்படலம்·

வேறு.

இந்தவாறுமணியம்பவேமனமெமூந்தபேருவகைக்குமோர்
அநதமின்றிமலர்வாயின்ஞான்றதெனவறத்தின்மங்கையருகண்மியெ
நிங்கையானவளறுய்க்கவல்லபடுநீலியீங்கிவவை நீக்குவாய்
சிந்தைவீங்குமயர்போகயான்றருவல்செய்யமாற்றமெனச்செப்புவாள். (க)

வேறு.

வானிலுற்றனபூவிலுற்றனமருவியுற்றனவார்கடல்
ஆனபற்பலவண்டமுற்றவுமாளுமாண்டவனுண்டெனு
ஊனமற்றதோர்ஞானதர்ப்பணமூடுகற்றவரறிகுவார்
றூனமற்றவனறைமலர்ப்பதம்நேர்ந்துபற்றிலர்நோற்றிலார். (உ)

ஆதிகற்பனைநீதியிற்படியானயாவையுமாதியின்
கோதிலாவழிகொண்டுநின்றனகூடுகாலவிகற்பமும்
பூதமைந்தினிலாகுமூவகைபூத்தவர்க்கமுமவனியில்
யாதுமொண்வழிசென்றுதத்தமக்காகும்வண்ணமயர்க்குமால். (௩)

பேதமுற்றுறுபூவுயிர்க்களுட்பேதமற்றிடிற்பெட்பறும்
ஆதரத்தமையாவுமற்றுகுமல்லல்கொண்டிடுமம்புவி
பூதமெத்தனைமாய்ந்துபட்டிடப்பூப்பதென்கொலோபுகலுவாய்
ஆதலித்துணைநீக்கியன்பினிலாதரித்தனனண்டர்கோன். (ச)

ஆழியானருளாழியானறவாழியான்குணவாழியான்
பாழிஞாலமளித்தகாவலன்பத்தருள்ளம்பரிந்துளான்
ஊழியூழியுலைந்துவீயினுமூலைப்பிலானவனொண்கழல்
பூழியன்னதோர்பிறவிபூண்டவர்பெற்றிலார்நிலைபெற்றிலார். (ரு)

தானமென்படுந்தருமமென்படுந்தகைமையென்படுந்தாரணி
ஞானமென்படுநன்மையென்படுநல்லவான்மறையில்லெனில்
ஆனமாமறையானவன்பினகத்தமர்ந்துழலாத்துமா
ஊனமின்றிமதர்த்துவாழ்தரவுள்ளுவானறமுள்ளுவான். (சா)

என்னமாதவளேற்றவுங்களியெய்திமெய்ம்மயிர் பொடிதரச்
சொன்னவாசெவிதுய்த்துமெய்யறிவுற்றதோளெழித்தோன்றனும்
அன்னமேவிரிவான்றபூமியிலையனுனுயிராள்தரத்
துன்னுநல்லறமுள்ளயாவுநீசொல்லுவாயெனச்சொல்லுவாள். (எ)

ஆக்கமென்பதுமறமொழிந்தனவாக்கமாக்குதலில்லையாற்
போக்கிவன்பழிநிரயமுய்த்துறல்போக்கியைந்தயர்போக்கியே
மோக்கமுற்றுறுபதமளித்திடும்மூன்றுமொத்ததுமுற்றுமேல்
நோக்கவிம்மையுமின்பமொன்றிடுநொய்தின்மெய்ம்மைநிறைநதுளோய். (அ)

நரரொழித்திழிஜீவராசிகள்நாளொழிப்பதோர்வாழ்வுள
பரவுமீதறிகெழுமுமற்றவர்பகருமும்மடிவாழ்வுளர்
வரைவிலின்புடைபரமனின்னருள்வருகவாழ்த்திடுவாழ்வுடன்
பெருகுமானிடர்ப்போற்றன்மற்றவர்ப்பேணலன்னவைபெற்றியோய். (௯)

கருதுமானிடர்கடமைமூன்றனுள்கடவுளுக்கிடுகடமையாம்
பொருதவன்னவனிட்டகட்டளைபோற்றியங்கதுபுரிவது
தருமமற்றவிரண்டும்யாவருந்தருவர்தத்தமக்கேற்புழி
பரவைசூழ்தருருலகுகாவலர்ப்பார்ப்பதுண்டொருதருமமேல். (௧0)

அங்கமாறுமறத்திஞேங்கிடவாக்குதிண்மையும்மீகையும்
பொங்குஞானமுமூக்கமுங்கொடுபோற்றுவானவனேயிறை
திங்களன்னவன்சாயலின்மனத்தெளிவின்மற்றையர்தெளிகுவார்
துங்கமானஅறங்களுள்ளனதோன்றறன்வயிற்றோன்றவே. (௧௧)

நீதியுற்றனயாவுளமுறைநெறிகளுற்றனயாவுள
கோதில்கொற்றவன்மாடுதித்ததில்கோணல்சற்றவனேகொளின்
பூதியுற்றிடுநாடுமங்கவன்புகழுமற்றுறுபெயரறும்
மாதுயர்ப்படமாழ்குமிம்மையின்மறுமையும்படுநரகமே. (௧௨)

உணந்தநூலினதுண்மையைநெறியுணர்ந்தவாய்மையர்சொல்லினை
புணர்ந்தறிந்தவைகொண்டுளத்திடைப்பொருந்தநோக்கினிற்கண்டவை
இணைந்தநோக்கியேநத்தமோவதுதுணிந்திழைத்திடுமேற்றமாம்
குணந்தரத்தகைகொள்ளவேகிளர்கல்விகேள்விகைக்கொள்ளுவாய். (௧௩)

கல்விகேள்விகைக்கொள்ளவேயெதிர்கண்டமெய்ப்பொருள்கவருவான்
செல்லுமொண்மனவற்றமேவரிற்றெரிந்தொழித்திடமுற்றிய
வல்லவாண்மையுமுற்றவேயெதிர்வரவுமோம்பிடவையகம்
புல்லினிற்கவும்பெரியதாமொருபொருவிலாவறிவோங்குமே. (௧௪)

வேறு.

அறிவோங்கவறுகுற்றமற்றுவிழுமவைநீங்கச்
செறுநர்தருபிழையொன்றுநின்றுழையுஞ்சேரரவால்
உறுகிளையென்றுளைப்புல்லியுயர்குடிகள்நனிகாக்கக்
கறுவுடையாரின்றுட்டிற்காறுழைக்கக்காண்பாயோ. (௧௫)

காண்பாயோதீவினையைக்கற்றறிந்தசீலநடை
மாண்பாளுர்துணையேற்றுமாலொழியமற்றையர்கள்
வீண்பாடிலாதளிக்கும்மெய்ப்பொருளுங்கைப்பகற்றி
வேண்பாட்டிடைச்சினத்தவெவ்வுரையுங்கொள்வாயேல். (௧௬)

கொள்வாயேலன்னலத்தர்கூட்டுறவைநாட்டவர்கள்
எள்ளாவினையிழைப்பையேதமுறவெண்ணுயால்
தெள்ளாவதரொதுங்கிசெய்யுந்திறன்றெரிந்து
விள்ளாவிழுப்பயனேமீப்படரமேவுவையால். (௧௭)

மேவியநின்முறைவழியேவிதியறிந்தநிலையிருந்து
மேவலரின்செருக்கடக்கிமேதினியையாள்வாயேல்
தூவுமழைவரல்நோக்கியகங்குழையுந்தூமயில்போய்
சேவடிகண்டுளங்குளிருஞ்சீர்மலிந்தகுடியம்மா. (௧௮)

அம்மாண்பினறைந்தாளையரசுமிருகைகூப்பி
இம்மாண்புரையளித்தீரெற்குற்றபகைகாணேன்
செம்மாண்பிற்செங்கோலுஞ்செல்கின்றவேறுசெயல்
நும்மாண்பினுளதாயின்நுவல்கென்னநுவல்கின்ருள். (௧௯)

நுவல்கின்றேநின்மாட்டுநொய்யமடியண்டிடுமேல்
கவலையுடனியான்கழறுங்கட்டுரையுங்கானசுரத்துத்
துவலையெனப்பாழ்படுமென்றஞ்சிமனஞ்சோர்தரவே
சவலமிலையென்றுரைப்பத்தாழ்கின்றேனென்றனளால். (௨௦)

என்றுரைப்பவிளங்குரிசிலென்னுரைத்தீரொன்றுரத்தை
நின்றறிவிர்பின்னைநனியதுகாறுநேரிழையீர்
குன்றலிலாவாய்வலியிற்கூறுமுறைத்திறத்தின்மனக்
கன்றலின்றியான்கேட்கக்கடவவல்லேதரவென்ருன். (௨௧)

என்ருனையிளங்கொடியுமிருநிலத்தின்முயலகற்றி
நின்ருரேநிரயத்துநின்ருர்நன்னெறிநின்று
குன்ருதபெருங்கீர்த்திகொள்மனத்தாராள்வினையிற்
குன்ருதுபணியிழைத்தார்கொற்றவனேயெனவுரைப்பாள். (௨௨)

வேறு.

வெம்பகைவிளைக்கவருமேவலரின்மிக்க
ஐம்பகையகத்திடையமர்ந்தஞர்விளைக்கும்
அம்படைவிழித்தருணமங்கையரடைந்தால்
வெம்பியவுயிர்க்கிறிதிமேவிவிடுமன்றே. (௨௩)

கண்ணினின்மயங்கியவர்கண்டமெழுதீய
பண்ணினின்மயங்கியவர்பற்றினின்மயங்கி
யண்ணலறிமேலமரழுந்தினரனந்தம்
பெண்ணின்வழிபட்டிலர்பிழைத்தனர்பிழைத்தார். (௨௪)

உறுப்பிடையொளிக்குமொருகூற்றமவருள்ளக்
கறுப்பிடையொளிக்குமொருகூற்றமவர்கண்டத்
தெறிப்பிடையொளிக்குமொருகூற்றமிளமாதர்
குறிப்பிடினவர்க்கொடியகூற்றமயலுண்டோ. (௨௫)

பாவையர்மனத்தகடற்பாழிபிறிதில்லை
மேவியகருத்தினிகல்வெவ்விடமுமில்லை
ஆவிபடுமன்னவருளாக்கனலுமஞ்சும்
பாவமிவர்மெய்க்கொடுபரந்தனபலிப்ப. (௨௬)

இன்னவர்துணைக்கொடுநல்லறமளிப்ப
உன்னினரழிந்தளறுகந்திடமடிந்தார்
மன்னநியவர்ப்புணரின்வாழ்வுகெடமன்ற
வன்பழிதலைப்படுவவைப்படுசுடர்ப்போல். (௨௭)

இத்துறையணங்கவளியம்பவிறைமாயக்
குத்திரமிழைத்தனர்கள்கொம்பனையொன்றால்
முத்திதருமில்லறமெனப்பெரிதுமுன்னு
ளத்திறனமைந்தனரிருங்குரவொன்றான். (௨௮)

என்றவுரைநன்றெனவிசைந்தனடொடுப்பாள்
பொன்றுகடுவும்பிணிகள்போக்கமருந்தாகும்
அன்றுபலபேர்களிலோரங்கனையிருப்பாள்
தன்றுணைவழிப்படிசலிப்பிலணடப்பாள். (௨௯)

பொய்மணியவற்றுளொருபூமணியுமுண்டு
மைபடுகரிக்கனியில்வச்சிரமுமுண்டு
வெய்யவர்குலத்திடையோர்மேலவனுமுண்டு
அய்யவதுபோலமையுமங்கனையுமுண்டால். (௩0)

நல்லவனுநல்லவளுநாதனருளாலே
இல்லறநடத்துழியிணைந்தனரோயாமால்
வல்லவர்நல்லறன்வளர்க்கவுமதிக்க
ஒல்லையினுயர்ந்தவொருமோக்கமினிதுய்ப்பார். (௩௧)

ஆதலினின்றுற்றநுக்கமைந்தவள்பணிப்பல்
கோதிலவளுற்றவழிகோதொழுயுநின்றன்
சீதவளநாடுநிறைசெல்வமிகவோங்கும்
ஆதவனுறும்புடவியாகுமுயிரெல்லாம். (௩௨)

அழற்கதிர்வெதுப்பொழியவாகுமழைவாரா
உழற்றருமருந்தொழியவுற்றபிணிதீரா
குழைப்படுமிரங்கலறக்குற்றமுளபோகா
உழைப்புடையவர்க்கலதுஉற்றசுகமேரு. (௩௩)

ஞாலமிசைமாந்தர்கணயந்தவைசிறப்பச்
சாலவவர்கைப்படுமெனப்படுசெவிப்பிய
வேலைவழியின்னலம்விளைக்குவன்விரிந்த
மூலமெனநின்றுலகளித்தருளுமுன்னோன். (௩௪)

விண்ணுறமனக்கொளின்வெறிந்தவையெறிந்து
எண்ணுறுதவம்பலவியற்றியிடையெய்தும்
மண்ணுறுபவத்தொழினமயக்கமிவைதள்ளின்
நண்ணுறவழிப்படுவர்ஞாலமிசைநல்லோய். (௩௫)

சான்றவர்துணைக்கொடுதழைக்குமறமாய
வேண்டுமெனிலங்கவர்வியப்புறவடங்கா
தோண்டுபலசெய்துவரத்தூயவரிரங்க
வேண்டுநலங்கொள்ளவெகுவைகல்வினைபோகும். (௩௬)

படைக்கொருதனிக்குரிசிலென்னவிசைபன்ன
மிடைப்படுமமர்க்கணுறுவெம்பகையைவெல்லும்
நடைப்பலவறிந்துசெயநாட்டுமொருசூழ்ச்சி
திடப்படவிழைக்குமொருதேர்ச்சியுறல்வேண்டும். (௩௭)

துய்யவுலகிற்கொருதுளக்கமுறுவேலை
செய்யவெனவுள்ளினதுசெவ்விதின்முடிப்ப
மெய்யயர்வினைப்படின்விரிந்தபுகழ்மேவும்
தொய்யினிகழுற்றிடர்ப்படுத்துளநுலைக்கும். (௩௮)

நன்குடியளிக்குமொருநன்மைபெறவென்றால்
அன்புடனடக்கியவர்க்காவனவிளைத்துத்
துன்புறினொடிக்கிநலந்துன்னுவகைநாடி
மன்புகழுறற்கடிதுவாய்ப்பிலதுமன்ன. (௩௯)

இற்றகையநற்பணிகணிப்பிலவிழைப்பாய்
சொற்றவமடக்கொடிதுணைக்கொளினவட்காய்
கொற்றவநீமுற்றுமுயல்கொள்ளெனவிசைப்ப
மற்றவளடுத்தசிலவார்த்தைகள்வகுப்பாள். (௪௦)

வேறு.

நரியோமுயற்றும்பலமேவிநலங்கொள்கானத்
தரியேறெனத்தன்னரசாட்சியினடக்கவந்தோ
பரிவாயுனக்கிங்கிதமென்றிவள்பணித்தவண்ணம்
புரிவாமெனக்கொளினதன்மிக்கதோர்புண்மையுண்டோ. (௪௧)

கல்லாதுகற்றகலைகொண்டிவள்கழன்றவெல்லாம்
இல்லாதசொல்லியிடருய்த்திடவெண்ணமல்லால்
எல்லாமளித்தவிறையென்றனளவ்விறைமுடிப்ப
ஒல்லாதசெய்கையொருமானிடனுற்றுமன்றோ. (௪௨)

கண்கண்டவன்றிக்காணாதனைகாண்பர்யாரோ
விண்கண்டமீனைவிறல்கொண்டுபிடிக்கலாமே
பண்கொண்டபாடல்பழமூகையும்பகருமன்றோ
எண்கொண்டசொல்லைஇகழ்கொண்டெறியினைருவென்றாள். (௪௩)

விண்போகமென்றுவீடென்றிவள்விண்டயாவும்
கண்போகமென்றுகருதற்ககட்டுரைத்தவெல்லாம்
உண்போகமாந்தியுடல்வீயுமுன்னுளங்களிக்கும்
பெண்போகமன்றிப்பெரும்போகம்வேறுபிறப்பதுண்டோ. (௪௪)

தானாவுதித்ததனிவாழ்க்கையுந்தாழ்விலாது
ஊனோடுமின்பமுடன்றுய்த்திடுமொண்மையைந்தும்
ஏனோபயன்பாடலில்லாதுபொய்ப்பவிருந்தவிந்தப்
பூனாறுகூந்தல்புகலுற்றனள்புகழின்மிக்கோய் (௪௫)

என்னாவுரைப்பவிகழின்னகையெறிப்பவுள்ளம்
இன்னாவிளைக்குமெரிவெங்கனலிட்டதென்ன
தன்னாத்தழும்பத்தனிவான்கொடிசலிப்பினந்த
மின்னாளைநோக்கிவெகுண்டித்துணைவார்த்தைவிள்ளும். (௪௬)

உரஞ்சேரும்வள்ளலுளம்வஞ்சனையுய்த்துவல்ல
அரஞ்சேரிரும்பின்னறுப்பானுறுமச்சமற்றோய்
சுரஞ்சேருகானற்சுடர்பட்டழிகீட்டினுந்தம்
பரஞ்சேருமாந்தர்படுபாட்டினைப்பகர்வதென்னோ. (௪௭)

பசியேறுமுன்னர்ப்பலவுண்டிபருகல்பானக்
கசிவேறுமுன்னர்க்கள்ளுண்டிடல்கறங்குநெஞ்சை
நிசியேறுபேயின்னிலைபாட்டிடல்நிலையழிக்கும்
விசைமாருதத்தின்விசைமெய்ப்புலன்மேவுமன்றே. (௪௮)

வன்பித்தமேறமனம்வேறுறுமாந்தரென்ன
உன்மத்தங்கொண்டுஊனைநைந்திடவோங்குஞானம்
[illegible]ம்பித்துநிற்கத்தடுமாற்றமடைந்துதாழும்
கும்பிக்கிலக்கர்நினையண்டிடுகுண்டரெல்லாம். (௪௯)

வேறு.

தொணித்திடுநல்யாழிசைசெவிக்கிசைகடுன்று
கனைந்ததொருகிர்க்கிபுவிகழறலிசையாகும்
பணிந்தமொழிவஞ்சியரைப்பாரிலழகென்றாய்
மணப்படவுரைப்பின்வருவண்மையுமதாமோ. (௫0)

உன்னையடைமாந்தரனைவோருமனமுள்ளாக்
கன்னலினுவப்பவர்கள்கண்டுயில்கொள்போது
பின்னுகனவன்றுதவமேனிதுவள்காலத்
தென்னவருமுட்டியரமன்றியினிவேறு. (௫௧)

முதுப்படுதளர்ப்பருவமுற்றிவரமேனாள்
மதச்செயலெணித்துயரின்மாழ்கியுளமங்க
விதத்தடலுநொய்பலவிழுந்துயர்விளைக்கச்
சிதைப்புறுமுடற்படுதிறத்தவர்திகைப்பார். (௫௨

என்னபிணியென்னநலிவென்னவிதியென்பார்
முன்னறிதுமுன்னினுயர்மெய்வழியமென்பார்
இன்னலினமிற்றபினெனைப்படுதுமென்பார்
உன்னையடைமாந்தரிதுவுற்றநலமென்றாள். (௫௩)

வேறு.

யானோவென்னிலறிவுடையோர்பாலெஞ்ஞான்றும்
தானேயண்மித்தளர்துயர்போக்கித்தாழ்வில்லா
மாணார்காட்டும்வன்பிழைதப்பும்வழிகூட்டி
ஆனாவின்பவாழிகளிக்குமருள்செய்வேன். (௫௪)

தாளிற்றந்தமீப்பயன்யாவுந்தணிவின்றி
நீளச்செய்வேன்நேர்மைதெரிப்பேனெறியெய்தும்
கோளைக்கொன்றேயின்னலகற்றிக்குணமேவும்
கேளிற்சென்றேயண்டினர்தம்மைக்கெழுமிப்பேன். (௫௫)

வேறு.

ஆனதோரூக்கமும்மறிவுமாண்மையும்
ஊனமிலிரக்கமுமுயர்வுநேசமும்
ஈனமில்வினைகளுமிணங்கிநின்றநற்
றானமேசேருவறையல்யானரோ. (௫௬)

என்னுடைத்தொண்டர்கட்கேற்றவுண்டியா
மின்னமுதென்னிலோவேற்றுபற்பல
அன்னமுமாணமுமறுசுவைதொகத்
துன்னிடுமவைபலசொல்லக்கேட்டியால். (௫௭

வேறு.

பசியுந்தாகமும்பரிந்துவேண்டிட
விசையுநெஞ்சமும்ஏங்குமேனியுங்
கசியுமூற்றமுங்காணவுண்டிடும்
வசையிலன்னமேவான்மருந்துமே. (௫௮)

அமரிராவினிலவர்கடேங்குற
வமளிமஞ்சமுமநிலவட்டமும்
சமையுங்கானமுஞ்சாற்றிலாங்கவர்க்
கமைவவொன்றிலையறையக்கேட்டியால். (௫௯)

நிறுத்தெனன்பர்கணீடுநற்றொழில்
துறத்தபின்மனத்துளக்கமின்றியே
உறுத்தவின்றுயிற்றூங்கியோங்கியே
சிறுத்தபாயலிற்செலுத்திமீள்குவார். (௬௦)

தூங்குவேலையிற்சுகத்துக்கூன்செயும்
வீங்குபற்பலவெய்யதோற்றமும்
தீங்குசெய்கனாத்திரளுமன்னவர்
ஓங்குநெஞ்சினையுலைக்கும்பாலவோ. (௬௧)

அரியபாலகர்யாருமன்புறப்
பெரியர்செய்கையூர்பேசக்கேட்டுளம்
கரையவன்னவர்காட்டக்கண்ணுவார்
விரியுமெய்ப்பொருள்மேவுசிந்தையார். (௬௨)

பன்னலேனினிப்பகரக்கேட்டியிந்
நன்னிலத்தெனைநாடுமாந்தர்கள்
பொன்னிலக்குறுபோகமேவுவார்
இன்னமன்பர்தம்மிதையத்தூறுவார். (௬௩)

பாரின்மேலவர்பண்புமேவுவார்
சீரினாயுணாட்டெய்ந்தகாலையில்
தேரின்யாக்கைதான்சிதைந்தபின்னரும்
நேருவானத்துணீடுவாழ்குவார். (௬௪)

என்னலும்மவளிலங்குநன்முகம்
தன்னைநோக்கியேதலைகைகூப்பினான்
கன்னலஞ்சொலாய்காற்றனீயெனா
மன்னன்கூறினான்மற்றுங்கூறுவான். (௬௫)

துன்பமேவினுஞ்சுகமுண்டாகினும்
இன்பநாடினும்ஏதுசெய்யினும்
அன்பினின்னையானண்டினேனெனை
அன்பினாட்கொளாயன்னையென்றனன். (௬௬)

வேறு.

வாகையுடனிந்தமொழிமன்னவன்விளம்ப
தோகைசுகதேவிதலைதொட்டருளலுற்றாள்
வேகமுடன்மற்றவள்வெருண்டகலும்வேலை
போகவதியேயெனவிளித்திறைபுகன்றான். (௬௭)

பொற்றொடிநினைத்தழுவுபோகமெனக்கில்லை
யுற்றதையுரைத்தனினியுன்மனதிலொத்த
பற்றுறுபவற்குனதுபான்மைதெளிவிப்பாய்
சிற்றடிநீசெல்லெனவிகழ்ந்திறைசிரித்தான். (௬௮)

# முயல்வினைகாட்டுப்படலம்.

வேறு.

மற்றவளகன்றகாலைமன்முகமனாங்குநோக்கா
கொற்றவேலண்ணனிற்கேகூறுமாறுரையொன்றுண்டால்
அற்றதுகொள்வையாயினம்புவியதனுளாறு
வெற்றியும்புகழுந்துன்னும்வீரகேளென்றுசாற்றும். (க)

மெய்வழியறிதல்ஞானம்விதிவழியொழுகறேற்றம்
உய்வழியிவற்றினுமென்றுறுவழியுரைப்பர்மேலோர்
பெய்வழிமேகமொக்கும்பெருந்தகைக்குரிசிலேநீ
செய்வழியுலகமுய்யும்சீர்வழிசெப்பக்கேண்மோ. (உ)

அகழ்கிடங்கலையுடுத்தவவனியிலறிவுவாய்ந்தோர்
புகழெனுங்காயமேவிப்பொன்றிலர்பொலிந்துநின்றார்
திகழ்மணிமார்பமற்றோர்தேய்ந்திட்டாரிம்பரும்பர்
நகைவழியொழித்துமேலாநல்வழிநாடனன்றால். (ங)

ஐயிருகாதநீண்டவரணியமதனுக்கப்பால்
மையிருட்சடமொன்றுண்டால்மற்றதின்வைகும்பொல்லாப்
பையரவொன்றுசீறும்பருமருப்புறுவெஞ்சீற்றக்
கைமலையொன்றுநின்றேகடலெனப்பிளிறுமன்றே. (ச)

தூயநன்மனத்தாயந்தத்துதைதருகானத்தின்னோர்
பேயுளததனைக்காணிற்பேய்க்கணமிரியல்போகும்
சீயவேறனையாய்நீயேசீறுமிப்பகையைவாட்டி
ஏயினிற்படுத்துப்பின்னரியற்றுறுகருமங்கேட்டி. (ரு)

சொல்லியபகைகண்மூன்றுந்தொடக்கறத்துணித்துப்போழ்ந்து
புல்லியவிலங்கனீட்டப்புணர்ப்பினிற்பிரிந்துபோக
எல்லியைப்பகல்செய்விக்கும்இருள்வனத்திடையினங்கோர்
கல்லியவதரொன்றுண்டால்கட்புலத்ததனைக்காண். (சு)

புகுவழியதுவலாதுபுதைவனமதனின்வேறோர்
பகுவிலைமசகும்போவப்பார்த்திபபகரக்கேணி
முகநிமிர்ந்தேகிற்றாக்குமுட்புறம்பொசிதல்வாய்க்கா
தகவதனளவுகூறிற்றண்டமாயிரமேகாண்டி. (எ)

இத்துணையதரினெல்லையேகிடினதனுக்கப்பால்
வித்தகவெளிதிற்றோன்றும்வென்றிமால்வரையென்வெற்பு
ஒத்ததனுச்சிநோக்கிலொண்டொடிப்பவளச்செவ்வாய்
அத்திரவிழிமின்றோன்றுமங்கையிற்றீபமேந்தி. (அ)

வேறு.

அந்தவாணுதல்மங்கையர்யாரினும்
முந்துவாள்வனப்பென்றறிமோய்ம்பநீ
கந்தநாறுமவள்கரத்தீபமுன்
சிந்தைமேவுமிருளைச்சிதைக்குமால். (க)

தோகைமெல்லிடைத்தூநகையாளொடு
போகமாக்கடலாடுவைபூபதி
வாகைசூடணிமார்பநின்னெஞ்சுறுஞ்
சோகம்போக்குமவள்கைச்சுடரரோ. (௧0)

அஞ்சமொக்குமவனிவனிதையர்
விஞ்சுபோகநிலையிலவீயுமால்
கிஞ்சுகவ்விதழ்க்கிள்ளையினின்மொழி
வஞ்சிபோகமறைகுவதில்லரோ. (௧௧)

ஓதுமானிடமாதரினேங்கிய
காதல்முற்றுங்கவடறிகாளைநீ
தீதில்வான்சுடரோர்ந்துமிச்சேயிழை
வேதமன்னதோர்மெய்மையள்வேலினேய். (௧௨)

நிலையிலாதவிளமையும்நீங்குமால்
தொலைவிலாததுயரமுமோங்குமால்
கலைபுனைந்தகழைபுரைதோளியர்
நிலமருங்கிற்றருநிறையின்பமே. (௧௩)

நிலையிலாதவிளமையுநீளுமால்
துலைவிலாததுயரமுஞ்சோருமால்
கலைபுனைந்தகழைபுரைதோளியிந்
நிலமருங்கிற்றருநிறையின்பமே. (௧௪)

மானிலத்துவனிதையர்தந்திடும்
மானலத்தவரனலமிங்ஙனே
மானலத்தவிம்மாங்குயிலின்பமோ
மேனலந்தருமோக்கமுமேவுமால். (௧௫)

வேறு.

பன்னுவதென்னினிப்பகரக்கேட்டிவாழ்
மன்னநின்போகமும்வளமுஞ்செல்வமும்
மின்னனவேணர்ந்திடவீதலின்றியே
துன்னுமேமறுமையுந்தொடர்ந்தென்றுளரோ. (௧௬)

வேறு.

பாரொங்குஞ்செங்கோலினளந்தேபகைவென்று
வீரங்குன்றுவென்றிவிளைக்கும்விறல்மேவ
தாரங்கொள்வைதப்பலைவாழிசதமென்றுள்
ஏரங்கம்மாளென்னையளிக்குந்திறந்நம்மா. (௧௭)

என்றேவெற்றிச்சொன்னவள்தாளிணைதாழா
அன்றுய்வாழியேகுவல்சானந்தவள்பால்யான்
துன்றுளெண்ணிலாவிறப்பல்நுணியென்றே
பொன்றுள்வாழ்விப்போம்விடைதந்தேபுறமின்றுள். (௧௮)

## அரவுகொல்படலம்.

புறநின்றவள்பாற்போநினைவைப்பிணித்தேயுள்ளச்சிறைபூட்டி
நிறநின்றிமைக்குமணியண்ணனெடுமெ நகர்மீண்டணுகிப்பின்
அறனின்றகலாவறிவமைச்சர்ஐவர்தம்மையாதரத்தின்
திறனின்றிலகும்புவியளிக்கச்செய்துவடபாற்செலலுற்றான். (௧)

துணிந்தேவடபாற்செல்வானைத்துணைத்தாடொழுதேசமதியெனும்
குணந்தேரன்பன்பின்னெய்திக்குவவுத்திண்டோட்கோவேந்தே
இணைந்தார்பிரிதலிப்புவியிலிழிந்தார்வழக்கமிலகியநூல்
உணர்ந்தாய்தேர்ச்சியுறுமேலோர்ஒழியார்நட்பையுரவோனே. (௨)

தொட்டகாதன்மனையாளும்தோமில்கூடப்பிறந்தாரும்
இட்டகுரவர்பெய்ப்புதல்வர்என்றேயறையுமிருங்கேளிர்
தட்டலின்றியொளியுள்ளஞ்சமைந்தயாவுநதனியுணரார்
நட்டவொருவன்பின்னன்றேஞாலத்தேனையுறவையா. (௩)

வெய்யகானந்தனியேகவிரையும்மரசேவிட்டுனைநான்
உய்யேனுய்யேனோர்கணமும்உயிர்போயுடலுநிலையாமோ
அய்யநினக்கேயாவனவுமன்பினிழைப்பேனயர்வஞ்சேன்
செய்யோய்கோடதுணையென்னாச்செற்றார்த்தேய்க்குங்கழல்பணிந்தான். (௪)

என்றேயுள்ளநைந்துருகியிருகண்பனிப்பவழிவானை
குன்றேயன்னபொற்றோளான்கொண்டேயகலங்கொளப்புல்லி
பொன்றேனியானும்புகழின்றிப்போமாநிதியும்பெற்றேனால்
இன்றேநின்றன்றுணைகொண்டேன்ஏகாயென்னோடினியென்றான். (௫)

தன்னேர்துணைவன்றனைநோக்கித்தனிப்பூங்காவிற்றானணுகி
நன்னீர்மல்குகயத்தாடிநலமேகருதிமனையைய
மின்னேரிடையார்முன்னியதும்விரகாள்நொடித்தவிலக்கியதும்
பின்னேரறத்தாளுரைத்தவையும்பிசகாதறிவித்ததர்சென்றான். (௬)

இவ்வாறிறையுமின்னமைச்சும்எழில்சேர்நகரமதுபோக்கி
மைவார்சோலைமலர்வாவிவளங்கேழ்பணையும்பின்னாகச்
செவ்வாய்க்கொடிமெல்லிடையார்வாழ்செங்கேழ்புறவங்கடந்தேபின்
வெவ்வாயரவுற்றுழல்கின்றவெறிகாந்தாரப்புறங்கண்டார். (௭)

அளிபாண்மிழற்றுநறுந்தாரான்அணிநன்னாட்டையகன்றப்பால்
களிசேர்மாந்தர்செலவொல்லாக்கனைகாந்தாரந்தனையண்மி
துளிவீழ்தேறல்நறுங்கனியுந்தூரங்கமழுமலர்த்துணரும்
அளியில்லிழிஞர்பொருளென்னஅவமேகிடக்குநிலைகண்டார். (௮)

சொல்லாப்புலவனிருங்கவலைபோல்சுடர்விட்டெரியுமினமணிகள்
எல்லிற்கனிந்தகமர்வாயினிருந்தேகிடப்பவிறைநோக்கி
நில்லாதொழுகன்மாநிதியம்நிலையில்வாழ்க்கைநேர்மாந்தர்க்
கல்லாலன்றியருங்கானத்தமைந்தவெங்ஙன்கெடலென்றான். (௯)

மன்னனுரைத்தசெவிமாந்திவளிசூழ்மல்லன்மாநிலத்து
முன்னர்க்கிடந்தவவையெல்லாம்மோய்ம்பின்மனிதர்மேற்கொண்டார்
பின்னர்ப்பல்கியறிவெய்திப்பெரும்பாரெங்கும்பொருடேடித்
துன்னியிவணுள்பயன்றுய்ப்பர்என்றுன்சுமதிப்பெயரானும். (௧௦)

காரைபுரண்டைகடுவழுதைகண்டில்வெண்ணெய்காகோளி
சூரைநாரம்பேரீந்துதும்பைகரந்தமாவாரை
வேரிநிறைந்தமலர்ப்பிண்டிவேல்புந்நாகமுதலாகப்
பேருமறியாத்தருமேவும்பெருங்காந்தாரப்பரப்புற்றார். (௧௧)

வேறு.

கிஞ்சுகமுகையெனக்கிளிமுகமுராலும்
அஞ்சிறையளியினமருகடைந்தளைய
விஞ்சியவரிகருநாவலின்விளைந்த
செஞ்சுவைப்பழமெனத்தெரிவனசுகங்கள். (௧௨)

ஒன்றியகுணம்பலலோபமதுறுமேல்
பொன்றியவிதமெனப்புதுமணங்கமழும்
நின்றகன்மடல்படுதாழையைநெடிய
வன்றிறனமாசுணம்வளைந்தனமறிக்கும். (௧௩)

புல்லியர்வாழ்வெனப்பொரியரையாரம்
வல்லியிற்படர்ந்தயல்வாழ்பணிமருவும்
எல்லியினிழலிடுகோடியுளில்லிறகிற்
புல்லியபெடையொடுமயிலினம்புணரும். (௧௪)

மாவிடைக்குயிலினமொலிசெயமருங்கில்
ஓவெனக்கதறுவவுரண்டமுமறிஞர்
மேவவையடைந்தவர்வியன்மொழிக்கெதிரே
கூவுறுமிழிஞரினிழிவுறல்குறியா. (௧௫)

கறுப்புடையகத்தினர்காமுகர்க்கலக்க
உறுப்பிடைமினுக்கெழிலுறுத்துவவுறழ
வெறுப்படைவெவ்விடவெயிற்றுடையரவம்
புறப்படுவனப்பொடுபொலிந்தனபிலமே. (௧௬)

வேயினமிழைபடவெளிபடவிரவும்
தீயினமவைபடச்சிதைபடுமரனும்
காயினங்கனியினங்கரிபடக்கலுழும்
வீயினங்குழைபடவெறிபடும்விபினம். (௧௭)

தீம்பரின்வாழ்வெனத்திறனழிந்தவியும்
கூம்பியகனல்படுகுவியலினிறைந்த
சாம்பரினெழுமிதிதவழ்தருகடதனுத்
தேம்பியவுளத்தவர்திகைத்தனர்சென்றார். (௧௮)

தூமிசொடுகுரவகஞ்செறிமணங்கமழச்
சமியொடுமருதமுந்தனிநிழல்கதுவ
இமிர்தருமளியினமிசைபலகெழுமத்
துமிதருமழைநறைதூமலர்பொழிய. (௧௯)

உழுவையுங்கரிகளுமுறுசமரிடைவிண்
மழையொலிகெடவெதிர்வழங்குவவளமார்
வழைபடுநிழலிடைவனமயிலகவ
முழைபடுமரியுருமுறிபடமுழங்கும். (௨௦)

ஓரியுநரிகளுமொருபுடையிரைய
மூரியுமரைகளுமுறைமுறைதிரிய
காரரவிடையிடைகணங்கொடுதவழ
நேர்படுசமர்நனிநெருங்குவநெறியே. (௨௧)

வேறு.

கொம்பிற்றொங்கும்பையரவத்தக்கொம்பென்னத்
தம்பித்துள்ளேவாயுவடக்கித்தனியாடப்
பம்பித்துள்ளிப்புள்ளினமற்றைப்பகுவாயின்
கும்பிக்குள்ளேசென்றனபட்டுக்குமையும்மால். (௨௨)

நீரிற்றோன்றுநீர்ச்சுழியென்னநுண்ணயிரில்
நேரிற்செய்புமென்புழையாழ்ந்தநிலைநின்று
ஓதத்தின்னுமூர்வனபட்டேயுள்ளோடத்
தூரிறநள்ளித்துன்னிரைகொள்ளுந்தொழில்கண்டார். (௨௩)

போத்துக்காடைசிம்புளெனப்போங்ககமெல்லாம்
ஏய்த்துத்தன்பாலெய்தியபற்றியிரைகொள்ள
ஆர்த்துத்தத்தம்பயிரிறொலித்தேயவைநாட
காத்துக்கொண்டோரண்டசிற்குங்கதிகண்டார். (௨௪)

வெள்ளைக்கில்லைகள்ளமெனச்சொல்விதியெல்லாம்
அள்ளாற்பள்ளத்தண்பணைஞாலத்தறன்மேய
உள்ளாற்கன்றியூன்வதைசெய்தேயுயிரோம்புங்
கள்ளாற்கில்லைகற்பனையென்றான்கறையில்லான். (௨௫)

வேறான்கொன்றேமேனிவளற்கும்விதமல்லால்
ஊறுந்தாபத்துட்பசியோட்டுமுளவோராக்
கூறுங்கானத்துள்ளவைபோக்கிக்கொலைபாவம்
தேறுந்நூலிற்றேர்ந்தவரன்னசெயலென்றே. (௨௬)

சுமதிப்பேரானின்னவைசொல்லச்செவிகொண்டு
சமதிக்கெல்லாஞ்சக்கிறுறுஞ்செஞ்சவிகண்டு
கமைபச்செங்கேழ்வீறுவக்கக்கங்கொளால்
அமைபக்கண்ணுறுமங்கநடுபோக்கியயல்போனர். (௨௭)

மையார்கானத்தெல்லைகடந்தேவழிகொண்டார்
எய்யாமேனியெய்த்தவருள்ளமெரிவீழும்
நெய்யாமென்னநேர்ந்தனர்கண்டார்நெறிமுன்னே
வெய்யோர்நெஞ்சமென்னகொதிக்கும்வெம்பாலை. (௨௮)

முன்னர்ச்சென்றேமோய்ம்பினர்தம்மைமுடுகித்தாம்
துன்னிச்செல்லீர்திவ்வழியென்றேசொல்வண்ணம்
மின்னற்செய்யுந்தூவிகளெங்கும்விரிவானம்
தன்னிற்பொங்கியார்ப்பனகண்டேதளர்வுற்றார். (௨௯)

வியந்தார்சென்றார்மேலவரந்தவெங்கானம்
நயந்தாருண்டேநாட்டினவொன்றுநடுக்குற்றே
பயந்தாங்கொண்டபார்த்திபனோக்கிப்பயனேடி
முயன்றார்க்குண்டோமுட்டிடையென்றான்முதுநூலான். (௩௰)

தன்னிற்றேறித்தென்புதழைப்பத்தளர்வின்றி
முன்னுற்றாறும்வெல்லுதுமோய்ம்பின்விரைந்தென்றுப்
பன்னிச்செல்லப்பாழ்படுமந்தப்படியெங்கும்
மின்னற்கண்டேவெம்பினனெஞ்சம்விறல்வீரன். (௩௧)

கல்லுமண்ணுங்கண்படுகானிற்கரைந்தோடிச்
செல்லும்வில்லிட்டென்றிடின்வெம்மைத்திறனெண்ணிச்
சொல்லும்வண்மையென்படுமந்தச்சுரனுற்ற
புல்லும்மும்மைநேர்மையும்வன்கற்பொருளெல்லாம். (௩௨)

ஒண்மணியெல்லாம்வெம்மையினுட்கிப்பொடியாகி
நுண்டுகளெல்லாம்நொய்தினிணைநேரிழுதாக
மண்டுமழற்கொண்டன்னதுமாவிவடிவாகி
விண்மழையென்னவீங்கினவெம்மைகொழித்தம்மா. (௩௩)

தம்பித்தெட்டுத்திக்குமருண்டேதடுமாறக்
கம்பித்தந்தப்பூமிவெடித்தகமரூடே
பம்பிப்பொங்கிப்பொன்முதலுள்ளபடிந்தேற
வெம்பிக்கண்டேயுள்ளமுளைந்தார்விறல்வீரர். (௩௪)

புடவிக்குள்ளேயுள்ளபெருந்தீபுறமெய்திச்
சுடவற்றுள்ளோராம்புழையுண்டோசுடரொன்றி
விடமித்தேறிமீதுவெடித்தபிளவின்வாய்
தடவிச்செல்லுந்தன்மையதாமோவறியேமால். (௩௫)

வெப்பாலைக்குள்வெந்தழனேர்ந்தேவிண்ணூறத்
துப்பாமாடியென்னத்துலங்கச்சுரம்போக்கி
யப்பாலுள்ளதாவரமெல்லாமடிமாறி
இப்பாலுற்றுத்தோன்றுவகண்டாரிளவீரர். (௩௬)

வேறு.

ஆலைகடலடியுறவமர்ந்தருபெரிய
உலைபடுகொடுவனலுதைந்தழல்கெழும
நிலைபடுமுயிரிருநீருடன்மறுகித்
தொலைபடுகிடங்கெனத்தோன்றினசுரமேல். (௫௭)

விண்சுடர்விரிகதிர்விழுந்தனமறுகி
யொண்சுடரொரியிடையிழுதெனவுலைய
மண்சுடவாண்சுடமறிகடல்சுடமேல்
எண்சுடவகஞ்சுடவெழுந்தனகொழுந்தீ. (௫௮)

ஆடியிற்படுபெருந்தாரகையமைய
கோடியிற்பலவழலுண்டைகள்கொளுந்தும்
நீடியகொடிமினனிலையுறழ்ந்துருளும்
ஓடியமசரதமொருபுடையுலவும். (௫௯)

திக்குகளெங்கணுஞ்செழுங்கனல்படரச்
செக்கரிற்றேற்றியசேணிறைபொறிகள்
உக்கனபரந்தனவோய்விலவுலைவாய்ப்
புக்கெழுமிரும்படப்பொறிப்பனபோன்று. (௬௦)

காற்றவனுழைந்திலகனவுயிர்பறிகொள்
கூற்றவண்புகுந்திலகொடுசுரமிதன்வாய்
யேற்றநல்லுயிர்கொடுமேகுவதெவன்கொல்
வேற்றிறல்வயவனும்வெதும்பினனுளைந்தான். (௬௧)

இரவிலபகலிலவிருளிலவெளிசெய்
உருவுணர்தகையிலவழிவிலவொளியும்
கருவிழிதெரிகிலமறைகிலகடிதின்
சுரவழியினிநுழைநிலைதுருவிலமால். (௬௨)

இன்னனவுரைதருமிறைவனையிகல்போர்
மன்னவபணியெனமந்திரியறையும்
துன்னியசுரம்படச்சுகத்தொடுசெலவோர்
மின்னியகவசமிதிடுகெனவிளம்பும். (௬௩)

வேறு.

நெஞ்சுடைநெறியுடைமகளிர்காவலில்
வஞ்சகம்புகுந்திலாவாறுமால்செயும்
மிஞ்சியவெம்மையும்வீழச்சீதமிக்
கஞ்சுகந்தருமெனக்கரத்தினீட்டினான். (௬௪)

அன்னதுபூண்டனனவனிகாவலன்
உன்னவுஞ்சுடுசுரமொருவியொல்லையில்
பன்னெடும்பகலெலாம்பசியினெய்த்தவன்
துன்னுநீர்வேட்கையிற்றுயருழந்தனன். (௬௫)

அருந்துநீர்தருகெனவமைச்சுழ்மன்னவா
தெரிந்திலமிவணுளதிருக்குந்திண்மையும்
விரைந்துமுற்செல்லுதும்வெறிகொள்கான்படு
சுரந்துலைந்தறவினந்தூரஞ்சென்றிலேம். (௪௬)

வெவ்வராவொன்றுளவேழமேயுளக்
கவ்வைசேர்பேயுளகானத்தென்றனை
நவ்விவாணோக்கியைநாடிவந்தநீ
செவ்விதாய்ந்தறிந்தொருசெய்கையாற்றுவாய். (௪௭)

யானுனைப்பிரிந்தயலேகினையவிம்
மானவரடிபெருவடவிவாய்ப்படும்
ஊனழிகொடியவல்லுரங்கொள்பாந்தளும்
கூனுடையெயிற்றுடன்குறுகினென்படும். (௪௮)

என்படுமென்புயத்தினவுபோய்ப்படும்
மின்படுமெயிற்றராவிரிந்துபுண்படும்
முன்படுவிடத்துடன்முடுகியாங்கதன்
துன்படர்வெவ்வுயிர்த்துணிபட்டோடுமால். (௪௯)

மாலுனக்குண்டுகொல்மறதியேகொலோ
சாலுமென்னுற்றலிற்றவறுண்டாங்கொல்போர்
வேலையினேர்ந்தவர்மீண்டுளார்கொலோ
மாலைசெய்மலர்கொலென்மறுவில்வாளியே. (௫௦)

வெடிப்புடனின்னனவிளம்புமேந்தலை
அடித்தலம்வணங்கிநல்லமைச்சுமன்பினிப்
படிப்பெயர்ந்தகலலைபணித்தவாறுயான்
குடிக்குநீருதவுவல்குறியென்றோடினன். (௫௧)

ஓடியபோதவனுடனுற்றோடின
வாடியமன்னவன்மனமுநாட்டமும்
சூடியகவசமுந்துவண்டுசோர்ந்தது
பாடியபுன்கவிப்பாவிற்பாழ்த்தரோ. (௫௨)

நினைவழிந்தரையனுநிலையினிற்றிலன்
கனைகழல்போம்வழிகடுகிச்சென்றனன்
முனைமயிர்சிலிர்ப்புறமொய்த்துமீவிழும்
பனியெனக்குளிர்ந்துநீர்பனிப்பக்கண்டனன். (௫௩)

மழைபுரைபனிவளைவாய்த்தபொள்ளல்கொல்
புழைவழியருவிநீர்பொழியும்பெற்றிகொல்
முழையிவணுற்றெனமுறையறிந்திலன்
நுழைவழியெனமனநுடக்கமெய்தினன். (௫௪)

அடுத்துநீர்தூவிடவயர்வுவாங்குமென்
றெடுத்துநேரருந்தினனிருகையேந்தியே
கடுத்தசொல்லுரைத்துநங்காதலன்பனை
விடுத்தனமேயெனவெயர்த்துவிம்மினான். (௫௫)

ஆவியிற்போனதோரமச்சையண்மினான்
கூவியிப்பில்குநீர்குடிப்பச்செய்குவல்
மேவியமுழைவழிமீண்டும்போயென
வாவினனறிந்திலன்வழிகொள்வாயிலே. (௫௬)

இருண்டனமுழையெலாமிங்குமங்கும்போய்
மருண்டனன்மன்னனுமனத்தினன்னிலை
யுருண்டனவொடுங்கினவுலைப்பிலாற்றலும்
சுருண்டனவுணர்ச்சியுந்தொழிலும்போயதால். (௫௭)

ஒடுங்கினமுழைமுகமுள்ளகன்றன
படுந்திறலையனும்பக்கநெக்குடல்
அடுந்தொழிற்றசைவலியார்த்துமுன்னுறும்
நெடும்பிலக்கிடங்கிடைநிறுவற்கண்டிலன். (௫௮)

வேறு.

செவியொடுங்கினகுரலுந்திறனொடுங்கினபுயமும்
சவியொடுங்கினபடிவஞ்சதையொடுங்கினவலனும்
புவியொடுங்கினவரையன்புகழொடுங்கினகொடையில்
கவியொடுங்கியவகையில்கடிதொடுங்கினனிறையே. (௫௯)

ஈர்த்துமெய்யினையுளையவீர்த்தவென்புகணெரிய
வேர்த்துநெஞ்சழிவுபடவேர்த்துவெம்புனல்பெருகத்
தூர்த்தெழுங்குடர்சரியத்தூர்த்தசெஞ்சதைபிதிர
வார்த்தவெம்பிலவரணமார்த்ததண்ணலையறவே. (௬௦)

இந்நெடுந்தரையிறைவன்எதிர்படுமிடர்வழியில்
தன்னெடும்வலிதளரத்தானழிந்துயிர்குலைய
அன்னெடுமகல்முழையின்அளவிறந்தறிவகலப்
பனனெடும்பகல்துலையபண்பறிந்திலன்பதறி. (௬௧)

தன்னுணர்சிறிதுதரத்தானுறுந்திடன்மருவி
என்னையிப்புழைவழியில்எய்திநம்மெனமறுகி
துன்னியானிடருழலல்தூயமந்திரிபிரிவில்
குன்னமென்றிறைகுழையக்கூடினான்சுமதியுடன். (௬௨)

கூடினன்குரிசிலுழைகொண்டனன்குழையகலம்
வாடினன்சுமதிமனம்மன்னவன்னிலையுணர
நேடினன்னினையிறைவநேர்ந்தவிவ்விடரொழிய
நாடினன்னினிநலியல்நாடுவெம்முயல்வழியை. (௬௩)

இந்தவாறுரைபுகலவேந்தனுள்ளுளமழிய
புந்திமந்திரிவதனம்பூத்தகண்ணீர்படிய
சிந்தைவெள்கியதிறலன்செய்தவெம்பிழையின்மனை
நொந்துநோக்கிலன்றளரநொய்தின்மற்றவனுவலும். (சாச)

அய்யகேகளார்க்கும்விறல்அகமெழுமுவகைதரும்
நொய்யநுண்ணறிவழியின்றுவலருந்துயரிலிடும்
செய்யுமத்தகைதெரியதேர்ந்திலாய்திறன்மலிவின்
துய்யவாற்றினைதவறுதுயருழந்தனையரவில். (சாரு)

வேறு.

அரவினாலாயதிவ்வழிபெருஞ்சிறையுடன்
அளவிலாவமடிகண்ணாலமோசாலநாம்
உலவிலாவுரத்தினானுண்டதாமென்றென
வுளமழன்றருகினான்உறுபெருங்கறுவினான். (சாசா)

முட்டினானரவுடல்முறிதரப்புடைபடக்
கட்டினான்கந்தளம்கோதையங்கையினின்
எட்டினான்காலவேல்ஏற்றினான்குத்தினான்
துட்டராவல்லுடல்துணைதரக்கலையுற. (சாஎ)

கண்டராவிருவிழிக்கனலெழக்கடுவிடம்
உண்டவன்னவன்வயிற்றெறியினாற்றலைவுருத்
துண்டமாயவனுயிர்தோற்றிலன்வேர்த்துடல்
கிண்டிநேர்வழியுறக்கீறுவானாயினான். (சாஅ)

வீசினானவனுயிர்வவ்வுவல்மீண்டெனாப்
பாசமாஞ்சட்டகம்புரிகொளப்பணியுரத்
தூசிநேரிரசனத்தொழுகுவெங்கடுவெழக்
காசினெஞ்சினருளங்கன்றவேகாய்ந்துமேல். (சாகூ)

குழியுறுங்குமரர்கள்குழைபடக்குமுறியே
அழிபடும்படியறவார்த்துவிண்ணீர்த்தெழக்
கழியகூர்வேலினாற்காலையுங்கனல்விழிப்
பொழியவெவ்வரவுடல்போழ்ந்தனனாழ்ந்துளான். (எ0)

துளைபடச்சுழலும்வெவ்வரவுவெங்கானெலாம்
கலைபடக்கன்றியோர்காவதநீண்டபேர்த்
தளருடற்சாய்தரச்சாம்பிமோய்ம்புபோய்
உளைபடக்குடர்சரிந்துடல்விரிந்தொழியவே. (எக)

சாருவெம்புண்வழிதருகனம்பொழிதலிற்
றாரைகொண்டிழிமலைகடவுநீர்போன்றெழும்
தோகையுங்கானெலாஞ்சுழிகொளக்குமிழ்கொண்
டோரிருங் [illegible] . (எஉ)

விட்டவெவ்வரவுடல்வெரிநூறத்துளைசெயாப்
பட்டவப்புழைவழிப்பாய்ந்துமீப்படுமவர்
தொட்டபூநிழல்விடத்தோன்றுமொண்சுடரெனக்
கிட்டினுறொதிறும்கிரியின்மீதேறினர். (எரு)

மிக்கராவுடலினின்றிழியும்வெங்குருதிபாய்
யெக்கரிற்கானெலாமுழுகவிண்ணிடையெழும்
செக்கரோயொத்ததத்தடமெலாஞ்சேணுறும்
தக்கவான்சுடரொனத்தனையருந்தோன்றினர். (எச)

கக்குமாவிடமடர்கான்றரூஉம்மலைகளும்
ஒக்கவெந்துருகவேயுள்ளுயிர்ப்பொருளெலாம்
நெக்குநெக்காகவேநீறுபட்டழிதரத்
தக்கவான்றடையினுற்றனையருந்தப்பினர். (எரு)

வேறு.

உற்றதோர்பகைகண்மூன்றினுென்றினையுலைத்தாயின்னம்
வெற்றியந்தடந்தோள்வீரவெல்குவையிரண்டும்மேவி
பற்றியவிடரினீக்கிப்பயன்றவிர்த்தபயமீந்த
கொற்றவனகிலநாதன்குளிர்கழற்றலைமேற்கொள்வாய். (எசு)

அன்னதுபுகலவாழுமானந்தப்பரமன்பாதம்
தன்னகந்தழைப்பக்கொண்டுதாழ்ந்துபின்னவனைநோக்கி
என்னையேயுரைக்கவுன்றனீறிலாவறிவுநட்பும்
துன்னவேபிழைத்தேனல்லாற்றுயரினுக்கவதியுண்டோ. (எஎ)

போனதோர்புழையைப்பார்ந்தட்புன்வயிறென்பதோரா
ரானடைந்தழியும்வேலைநண்பனேநயந்துகாப்பத்
தானறிந்துற்றதோர்ந்தூதத்துறல்குதித்துப்போந்த
மானவவகைசொற்றென்னமந்திரிவணங்கிக்கூறும். (எஅ)

நீரினுக்கலைந்துநேடிநெடும்பகலொழியக்கண்டு
நேருறுமமடென்றெண்ணுநின்வயிற்றிருமிநோக்காச்
சூரடைகானத்தெங்குந்துருவியுங்காணேனாகிக்
காரராக்கிடந்தகாட்சிகண்டனன்கலங்குநெஞ்சன். (எகூ)

பற்பகல்கழிந்துமிந்தப்பாந்தள்தன்னிடத்திற்றீர்ந்து
சிற்புடைபெயர்ந்ததில்லைதேக்கெறிந்திருந்தவாயும்
பற்புடைதோன்றநீண்டுபடுத்தனவுணரினம்ம!
கற்பகமலிந்ததிண்டோட்காளையைக்கவர்ந்ததாமால். (அ0)

மதித்திருந்ததன்பேழ்வாயின்மறைந்தனன்மறைந்துள்ளேறக்
குதித்தனனிடையூறின்றிக்குறுகினன்குறுகியுன்னை
எதிர்த்தனனெதிர்த்தபின்னரிழைத்தனவறிந்தாயிற்றே
கதித்தபொற்கழலோயென்னக்காவலன்களித்துப்புல்லி. (அக)

நின்பெருந்துணையினானேநேரலர்ச்செகுத்துக்காதல்
தண்பெருந்தருவைப்பேணித்தனியுளங்கிடந்தவந்த
மின்பொருமிடையாள்கிட்டிமெய்யுறவுகந்துபுல்லும்
இன்பெனுநறவமாந்துமிருவரந்தருதியென்றான். (௮௨)

## கைமலைசெகுத்தபடலம்.

இன்னதுபுகலவேந்தனிணையடிவணங்கிக்கூறும்
நின்னதித்தனுவுமுற்றநிறையுயிர்ப்பொருளுமைய
அன்னவைபணித்துநிற்கேயாவனவிழைத்துக்கொள்வாய்
மன்னவவென்றான்சென்றோர்மலர்கமழ்மடுவைக்கண்டார். (௧)

கண்டனன்மடுவையண்ணல்காதலினுவகைபொங்க
மண்டமர்க்குருதிபோலமாபெரும்வலிகண்வாங்கக்
கொண்டுளங்களிப்பவுள்ளக்கொடுங்கனல்தணியமூழ்கி
வண்டமர்மனாயின்செந்தேன்மாந்தினன்மலர்க்கையள்ளி. (௨)

களித்தவர்க்குறுதிகூறிக்காரணமெடுத்துக்காட்டல்
குளித்துநீர்க்கீழ்நின்றோர்தீக்கொடுகடிதறிந்தாலொக்கும்
தெளித்தநூன்முனிவர்செப்புந்திறனது தெரியத்தோன்றல்
விளித்தமந்திரிசொல்லொன்றும்வேண்டிலன்வெறுத்தான்மன்றோ. (௩)

மன்னவோமன்னவோநின்வலனழித்துணர்வுபோக்கும்
புன்னைத்தேறலய்யபோற்றலைபுகழையந்தோ
என்னவோவென்னவோகோவென்னினைந்தென்செய்தாய்நீ
சொன்னறவருந்தல்முன்னுண்நஞ்சினுஞ்சோர்வதாமால். (௪)

ஐம்பெரும்பாவத்தொன்றாயடங்கியகளித்தலய்ய
இம்பருமிடரின்வீழ்த்துமெரிநரகிருத்திமாய்ப்ப
உம்பரும்விறகாய்நிற்குமொழியொழியுரவோயுற்ற
கொம்புநாலுடையவேழங்குழுகியகூலத்தம்மா. (௫)

வந்ததுவேழமந்தோமதமெனுமருவிபாயச்
சந்தவான்றடவுகுன்றந்தவழ்ந்தெனத்தருக்கினோங்கி
வெந்தெழுந்தழுகட்சீற்றவெம்பொறிகதுவச்சுற்றும்
உந்திவன்மரங்களெல்லாமொடிபடவுரற்றிமன்றோ. (௬)

என்றிவைபணித்தவெல்லாமேந்தலின்செவியுளேறா
வன்சிலையெறிந்தவம்பின்மழுங்கினமடிவக்காணாத்
தன்றிறத்தாயன்பீட்டுந்தடைப்படுமற்றநோக்கி
மந்திரிமறைந்துமன்னன்மாட்டடைந்திருந்தவேலை. (௭)

பேர்த்தடியெடுக்குந்தோறும்பிளவுபட்டழுங்கப்பூமி
வேர்த்தடங்குன்றமெல்லாம்விடவிடவதிரப்பொங்கி
சீர்த்தநன்மரங்களெல்லாந்திசைதொறுஞ்சிதறத்திக்கைபின்
நீர்த்தடத்தருகு[illegible]கிரியனையகைமா. (௮)

வேறு.

கரைசேர்வெங்கரிகண்டுகாதலின்
திரைசேர்செம்புனற்சிதற்றிச்சேணுற
விரைசேர்மென்மலர்விரிந்தபொய்கையிற்
குரைசேர்செல்லெனக்குமுறியுற்றதால். (௯)

செந்தாமரைமுதற்செறிந்தபூங்கொடி
உந்தாவருகிழங்குகுத்ததுண்ணுமேல்
சந்தார்கரையுறுதருக்கண்மீமிசை
சிந்தாநிறைபுனற்றிருக்கினுடுமால் (௧0)

மையார்வெங்கரிமறைந்தநீரிடைக்
கையார்வேல்பிடித்திருந்தகாளையும்
பொய்யாவாய்மையபுந்தியாளனும்
நையாவுடல்நனிநலிதன்மேயினார். (௧௧)

மன்னோமெய்யறிவழிந்துமாழ்கினன்
என்னோயானினியிழைப்பதீண்டெனாத்
தன்னேரில்லவன்றளர்ந்துதாழ்பட
அந்நீர்க்கரைகுடைந்தறையுளாக்கினான். (௧௨)

வண்டோர்கொண்டுழல்மாலைமார்பனைக்
கொண்டேயுள்ளுறக்குகையிறுத்தயல்
நின்றேமன்னவன்னிலையைநெஞ்சுறப்
பண்டேயுள்ளவன்பரிந்துசாம்பினான். (௧௩)

தேனார்பூங்குழற்றெரிவைசொற்படி
கானார்வெம்பகைகடியவந்தவன்
நோனாவெம்மதுநுகர்ந்துநொந்தனன்
ஆனாநல்லறமளிக்குமாண்மைபோய். (௧௪)

என்றேயின்னனவிரங்குமெல்லையில்
குன்றோர்வன்பணைக்குவவுத்தோளவன்
தன்றேரின்னுணர்தழைப்பத்தன்வலி
பின்றேநின்றதோர்பீழையுள்ளியே. (௧௫)

சங்கார்நீர்த்தடந்தணியநின்றயான்
இங்கோர்தூரிடையிளைத்ததென்கொலோ
மங்காவென்வலிமடியவந்ததோர்
சங்காரத்தொழில்சமைந்ததென்னவோ. (௧௬)

எண்ணாவின்னனமேந்தலவ்வையில்
கண்ணாநோக்குறக்கருளினுற்றவை
நண்ணாமல்விடநலிந்துநன்மையன்
புண்ணாவெந்துளம்புழுங்கிச்சாம்பினான். (௧௭)

களமேநிறைபுனல்கதுவக்காலடி
அளறோபுதையுறவவலம்பூண்டியான்
உளமேமடிதரவுற்றதீதெனு
விளவேயுரைதருமெய்யனில்லையால். (கஅ)

செய்யாரொன்றறியாதுசெல்வனும்
கையாலெங்கணுந்துருவக்கைவழி
பொய்யாநேர்மையப்புந்திமேலவன்
மெய்யாமேனியைவிரவக்கண்டனன். (ககூ)

கண்டேயன்னவன்கனகத்தோளினைக்
குண்டேயன்னவன்குறுகிப்புல்லினான்
உண்டேயாருயிருய்தலென்றனன்
பண்டேயுற்றதோர்பண்புசாலினான். (உ0)

துயராலேதுணிவிழக்கலையகட்
செயிராலேசெறியிடுக்கண்டோர்ந்திதை
வெயிலாருஞ்சுடர்வேலின்வீழ்த்துவாய்
உயலாகும்வகையுள்ளசொல்லுவேன். (உக)

உண்டாய்பூநனையுகுத்தகள்ளினை
விண்டாயறிவுமெய்மெலிந்துவீழ்ந்தனை
கண்டாயல்லையக்கடலினார்த்தடு
சுண்டாலம்வினைதுடிக்குந்தீமையும். (உஉ)

ஆலாலம்மெனவடர்த்துக்கானெலாம்
தோலாவாண்மையிற்றொலைத்துச்சுண்டிடக்
கிலாலம்படுகிடங்கினெய்தித்தம்
காலாலெங்கணுங்கலக்கன்மேயதால். (உங)

அடைந்தேயித்துணையயரிழைத்திடத்
திடம்போய்நின்றநின்சிந்தைநொக்கியான்
குடைந்தேயிங்குனைக்கொணர்ந்திரித்தினன்
கடம்பாய்வெங்கரிகாணலின்றியே. (உச)

வேறு.

என்னாயிவையோதியிருக்கையிலே
கொன்வானுறுகொண்டல்முழக்கெனவே
மின்வான்றனையெங்கும்வெருக்கொளவே
மன்வாரணமண்டியொலித்ததுவே. (உரு)

இங்கிதனையெற்றிமடிப்பலெனாச்
செங்கையினில்வேல்கொடுசீறியெழும்
சிங்கம்மனையான்கரஞ்சேர்த்தனையாப
பங்கஞ்சுரமில்லதோர்பண்பறையும். (உசா)

மடிவிற்படிமாகரிவல்லுடலை
தொடுவிற்கொடுதூரமிருந்தமைய
முடுகித்தருவெங்கணைமூட்டிவடுப்
படுவித்திடம்பார்த்துயிர்போக்குகையால். (௨௭)

யார்மலையன்னமதக்களிறின்
யாவுடல்கையுறவாளிகொடு
யாயெனிலீண்டியதன்வயினீ
ய்யாவினைசெய்திடர்மூழ்குகையால். (௨௮)

ன்றேயுறைபன்னவிருந்துணைவன்
றேயுறைசெய்தனைநாமயல்போம்
ன்றோர்வழியென்றிறைசொற்றலுமே
ன்றேபுறைதோளவன்கூறுமிது. (௨௯)

தடமுற்றிடிற்றந்தியின்கைப்படுவாம்
விடமற்றொருமெய்வழிகொண்டயல்போய்ச்
சுடுவிற்கணைதொட்டதுநெக்குருகிப்
படமுற்றியசூழ்ச்சிபகுத்தறிவாம். (௩௦)

கைவேல்கொடுகட்டுறுவன்கரைவாய்
ோய்தாம்வழியொன்றினைநூக்கியயல்
எய்யாமலெயேகுதுமெண்ணினிது
கையாறடையாவழிகாவலனே. (௩௧)

நெறியாளிதுபன்னிநெடும்படையிட்
டெறியாவழியெய்தவிடும்புழைவாய்க்
குறியாவளவாவியின்கோடுருவிப்
புறவாய்ப்படுகான்வயிற்போந்தனரால். (௩௨)

கண்டான்விறல்மன்னவன்கண்ணின்முனம்
வண்டார்பொழில்மாமரமென்பவெலாம்
சுண்டாலமடித்தயல்சூழ்மலைகள்
செண்டாடியழித்ததிறத்தினையே. (௩௩)

ஏகும்வழியெங்கணுமெள்ளிடவும்
சாகஞ்சிலையில்லனதானறியா
மாகம்வரைமுட்டியவன்களிறு
போகும்வகைசூழ்ந்தனன்பூபதியே. (௩௪)

சிந்திப்படுவன்றருச்சேதமெலாம்
பந்தித்தொருபாறைவளர்ந்ததெனு
அந்தித்துறுதிட்டையையண்மியிறை
சிந்தித்தனுச்சிசிறந்தனனால். (௩௫)

கடலென்னவகன்றகயத்திடைவே
றிடமில்லையெனப்படர்பேரிபமும்
தடமார்வரையொன்றுதவழ்ந்ததெனக்
கடமுந்துறநின்றுகலக்கினதால். (௧௬)

மிக்கோளெனவம்புயமென்கொடிமேல்
ஆக்கோடுயர்தூங்கவிருந்தசைய
வீக்கோவலில்வெம்மதம்மேவுகளை
தேக்கோதகமோடுசெறிந்ததுவே. (௧௭)

இம்மாமதயானையையீங்கணுகிக்
கைமாகணைகொண்டுயிர்வவ்விவரும்
எம்மாண்பயனெய்துவலியானெனவே
அம்மாண்புடைமந்திரியாங்கறையும். (௧௮)

விண்கீழுறமேனிநிமிர்ந்தவிதன்
கண்கீழதுகானமதுற்றவெலாம்
எண்கீழுறவேறிசைகொள்ளவிடை
பெண்கூறியவூறிதுபேணுதியோ. (௧௯)

கூர்த்தேயலைகுக்கலின்வெங்கடிவாய்ப்
பேர்த்தேயுளநஞ்சுபிரித்திலையேல்
ஆர்த்தேயதுபின்னயர்தந்திடுமா
வேர்த்தேவருவெவ்வினைமேல்வினையும். (௨௦)

தீயிற்படுசெம்பொறியொன்றுறினும்
வாயிற்படுபஞ்சுடன்மாய்ந்திடுமால்
பேயிக்கடவானைபிழைப்புறுமேல்
மாயப்பழிமட்டிலவந்தணுகும். (௨௧)

இங்கிதிடர்செய்யவிடம்பெறுமேல்
அங்கார்பணிதூக்கியிழைப்பதிலை
எங்கோவெனவின்னதுகூறலுமே
அங்காம்வழியண்ணலறிந்தனனால். (௨௨)

வேறு.

மலைவளர்ந்ததெனப்புயம்வீங்கவான்
சிலைவளர்ந்ததெனத்தனிச்செஞ்சிலை
கலைவளர்ந்தமதியுருக்காட்டவே
நிலையிலம்புறுஞ்சுகையைநேர்ந்தனன். (௨௩)

விண்பொழிந்தமழையெனவேழமீ
எண்சுழிந்தகணைகளிருத்தினன்
கண்புதைந்தகணைக்கிலைகாவலன்
ஒண்பதங்கருதிநந்துளிர்ந்தவால். (௨௪)

பாயுமம்புபடுமழைத்தூறலா
ஓய்வின்றியொலியுருமேறதா
வாயுசாபநல்வான்படுவில்லதா
காயுமண்ணல்கடுமுகிலாயினன். (௪௫)

மையின்மாமலைமீப்பொழிவான்மழை
மெய்கொள்தாதுகளாந்துவிழுந்துவர்த்
தொய்யலென்னத்துலங்கினதும்பியின்
மெய்யினின்றுவிழுந்தகுருதியே. (௪௬)

மலைவளர்ந்தவளைக்குலமென்னவன்
சிலையுதைந்தசெழுங்கிளையுற்றகை
மலைபுதைந்தெழில்காட்டினமண்டுதீ
தலையெழுந்ததெனத்தவழ்சோரியே. (௪௭)

இன்னமன்னனியற்றுறுவேலையில்
கனனந்துன்னுங்கடக்கரிசாய்ந்தெழும்
வன்னியென்னமறுகிக்கொதித்துமேல்
மின்னிவெங்கண்சுடர்விட்டெரியவே. (௪௮)

வாவுமொண்டிரைவாவியுமாழியா
கோவமுட்கரியாவுயர்கொண்டலிற்
றாவியேறுயிர்ப்பும்புகைச்சாரியா
ஆவிதூண்டலைநாவமும்மானதால். (௪௯)

படமெடுத்தெழுபாம்பெனப்புட்கரம்
தொடவெடுத்ததுதிக்கைநெறித்துவான்
இடியிடித்ததெனப்பிளிறேங்கவே
கிடுகிடுத்தனகீழொடுமேலரோ. (௫0)

அன்னிறத்தவடுகளிறம்புதான்
துன்னுமாறுதெரிந்துதுதிக்கையின்
மன்னன்மீதுமலிந்தயலுற்றவெங்
கன்னிரைத்துக்கடுப்பினெறிந்ததால். (௫௧)

அய்யனன்னதடுத்ததனாழிவாய்
வெய்யவெங்கணைவிட்டனனங்கது
நொய்யபுண்ணிடைத்தீநுழைந்தாலெனத்
தொய்யல்கொள்ளத்துளைத்ததுகும்பியே. (௫௨)

மீண்டுமற்றதன்றுண்டையைவெவ்விய
காண்டமொன்றிற்குறைத்தனன்காவலன்
கீண்டுதிக்குங்ககனமுங்கீழுறத்
தாண்டுமோசைதனிக்களிறிட்டதால். (௫௩)

துதிக்கைவீழுஞ்செந்நீர்தொகுசோனையில்
கதிக்கவீழுநன்னிரொனக்கோட்டிய
மதித்தயானையம்மன்னவன்மாடுறக்
கதித்தெழுந்துகரையையடைந்ததால். (ருச)

சிலையினம்புதெறிப்பச்சினத்தெழும்
சிலையினம்புதெறித்தகல்போர்க்கரி
தலையினஞ்சுதரையைத்தகர்த்தது
தலையினஞ்சுசரங்கடுளக்கவே. (ருரு)

ஓடியண்ணலுயர்த்தமுகட்டினைக்
கோடுகொண்டுகுமைக்கக்குரிசிலும்
தேடிமற்றுடைவாளுடன்செல்லவே
வாடியுள்ளம்மயங்கினன்மாடுளான். (ருசு)

முட்டிவானைமுகந்தமுடித்தலம்
எட்டியண்ணலங்கீர்ந்தனன்வாண்முனை
தொட்டகையின்சுவேதம்பொடித்தெனப்
பட்டமுத்தம்படிந்தெழில்காட்டவே. (ருஎ)

உதிரவாரியுவரியிடுேங்கிடப்
பதரிமெய்குலைவுற்றவப்பாழிமா
பிதிரஞாலமும்வானமும்பேதுறக்
கதறிவீழ்ந்ததுகார்முகிலென்னவே. (ருஅ)

அதிர்ந்தவான்மருப்பானையழிதர
அதிர்ந்தபூமியுமாசையுமாழ்ந்துள
அதிர்ந்தவார்மலையாவுமற்றம்புநேர்
அதிர்ந்தவேலையனிலம்திர்ந்ததால். (ருகூ)

வே று.

கடிபொழிலுறைதருககங்களார்த்தன
புடைபெயர்விலங்கினம்பொங்கியார்த்தன
இடையிடைமலைபடுவிரட்டியவ்வொலி
கடையுகத்தெழுகடன்கறங்கலொத்ததால் (சுo)

விழுந்தனதருக்களுஞ்சிலைகள்வீழ்ந்தன
குழிந்தனபுவிகடல்குமிழிகொண்டன
சுழிந்தனவளிகடிசுழன்றதிக்குயிர்
கழிந்தவக்கரிபடுங்கனத்திறலரோ. (சுக)

தூளிகளெழுந்தனதிசைகள்தூர்த்தன
நீளுடைமுகிற்படுபெருக்கின்வீந்தன
கோளுடைக்கடல்புறங்கொதித்தெழுந்தன
நாளங்கொள்புண்வழிநடந்தசெம்புனல். (சுஉ)

பொழிந்தவெங்குருதியிற்பெரியவான்றரு
வழுந்தினமலைகளுமமிழ்ந்தவாங்குள
குழம்பினவிலங்கினங்குருதிமூழ்கின
உழம்பினபதைத்தனவலைந்துசாம்பின. (௯௩)

மன்னனுமவ்வழியகன்றுமாண்புடைத்
தன்னிருந்துணையொடுதடங்கள்பிற்பட
துன்னினன்னெறியுழைத்தூறுமேவிய
உன்னதத்தருவடர்ந்துயர்ந்தவெங்கடம். (௯௪)

## பேய்பொருதபடலம்.

தந்தியின்றலைபுடைதறுகட்சீயவே
றுந்தியவுகிர்படவுகுத்தமுத்தெனச்
சிந்தியமாதுளைசிறந்தசெம்பரல்
பந்தியிற்படிந்தனபார்த்துப்போயினா. (௧)

குரங்கினங்கிளையறக்குலுக்கக்கூப்படும்
வரம்பிலபழங்களும்மலரும்மண்டிய
நிரம்பியவிடம்பலநெரியநீளிருள்
பரம்பியவெனநிழற்பரப்பிக்காட்டுமால். (௨)

பம்பியவளிக்குலம்படிந்துமீதெழ
செம்பகநறுமலர்சிவந்துகாட்டுவ
உம்பரினொளிவிளக்குறுத்தவொண்புகை
கம்பியினெழுமொருகாட்சிதோன்றவே. (௩)

ஆசைகொள்ளரிவையினழகமைந்துநல்
வாசமார்சந்துமான்மதமும்வாய்த்தது
தேசிகத்திலகமுமகருஞ்சேர்ந்தயல்
வீசியகால்படவெறித்துநின்றது. (௪)

கைக்கிளைவருந்துமோர்காரிகையெனு
மிக்கபல்லவத்திழைவீசன்மேயது
புக்கவுண்மதனுமொண்புளகநேர்ந்தது
தக்ககண்ணீர்படுந்தகைமைகொண்டது. (௫)

காதலினெழுமகங்களிக்கப்பாட்டிழைக்
கோதையர்குரலெனக்குயில்கள்கூதரப்
பேதுறுமனத்தவர்பிதற்றுமாறுறும்
ஊதலினிலையிசைந்தொலித்தலுற்றது. (௬)

குழவியின்களமெனக்கொடியவெம்புலி
பழுதறுவுகிருடன்பதிந்தகண்டகம்
விழவுறுகொடியெனவிளங்குபற்பல
நிழலிடுநிறையிலைநூழினேர்ந்தது. (௭)

இத்துணையிடம்பலவினிதினோக்கியே
உத்தமரிருவருமுலைப்பிலாவனம்
எத்தனைகடந்துபின்னிருண்டுவான்படத்
தத்தியகடமுறத்தயக்கமெய்தினர்.                    (௮)

வான்படுமுடிக்குலம்வளைந்துமீப்படும்
கான்படுதருத்தலைகவின்செய்தாலெனத்
தேன்படுவொண்மலர்தெரியத்தேனிறல்
ஊன்படவுலைதருஉரவின்றோன்றவால்.                    (௯)

மாத்திறமன்னவர்வாயிலென்னவுள்
போத்திறன்றகைத்திடைப்புகைக்கண்பொங்கிய
வேத்திரக்காடுறவேசையிற்றமூஉம்
காத்திரங்கொண்டுளங்கறுத்துக்காட்டிய.                    (௧௦)

நள்ளிருளுறைந்ததுநரகம்போன்றது
சிள்ளுடன்கதண்டுகள்சீறும்பாலது
உள்ளநெக்குருகவேயுயிருக்கூன்செயும்
எள்ளருங்கூற்றமதிருக்கைபோன்றது.                    (௧௧)

கண்டகநிறைந்ததுகரடியேமுதல்
திண்டிறல்விலங்கினஞ்செறிதன்மேயது
கொண்டல்களெழுந்தவைகொப்பளித்துமேல்
விண்டிருளுமிழ்ந்தெனவிளங்குங்கானமே.                    (௧௨)

செவிபுதைபடுவணம்சிலம்பிக்கூவுவ
குவிதருகரணங்கள்குழையச்சேர்ந்துடல்
அவிதருமறிவுடனகமுமாழ்குறக்
கவிதருவனத்துறுகணங்கள்கூடியே.                    (௧௩)

புழுவினநெளிந்தனபுரண்டவட்டைகள்
வழுவழுவுழன்றனவரிகொள்பாம்பினம்
கழுகழுவதிரிடைகாலிற்றுக்குறக்
குழைபடுமுளத்தவர்குமைந்துமாழ்கினர்.                    (௧௪)

இருள்படுவனத்திடைப்பெருகிர்த்தபாவையும்
மருள்படுமனத்தினைமறுக்கமன்னனும்
வெருள்படமெலியுமம்மெலிவைமந்திரி
தெருள்படுமறிவினிற்றீர்ப்பத்தேறுவான்.                    (௧௫)

மாலியின்கதிர்படமலிந்தவான்றொடு
சோலையுமலைகளுஞ்சூழ்ந்துபூவளை
வேலையுந்திகழும்விளக்குமின்பொழீஇ
காலனல்லுறைபுளாய்க்கருளிற்காட்டுமால்.                    (௧௬)

வாடியமனத்தினர்வருங்குமேனியர்
கூடியகடுவனங்குறுகியுள்ளுறத்
தேடியநின்றனர்அருந்தேர்ந்திலர்
ஓடியபருவமோரேழுமுற்றரோ. (கஎ)

விரிவனந்திரிந்துபத்தாண்டுவீந்தபால்
அரவடைமுத்தினனுறுமானைசேர்
விரைகமழ்கயத்திடைவிளிந்தவெட்டுமேல்
புரையிலிக்கான்முனர்போயிற்றேழரோ. (கஅ)

நல்லவையறிந்திலம்களிர்கொள்காறும்
அல்லலினுழந்தனம்அழுங்கியேங்கினம்
எல்லையில்பொழுதெலாந்துருவியேந்திழை
சொல்லியவழியினைத்தொடர்ந்தமில்லையால். (கக)

விண்டிவையிறைவனும்விம்மியேங்கியே
கண்டகண்டிடமெலாங்கருத்திருயுமார்
மண்டியபுதரிடைமறைந்துநீண்டவோர்
கண்டமர்த்திரியதர்களிப்பிற்காட்டினன். (உ0)

வேறு.

அறிந்தவேந்தனுமதர்வழிச்செலவுளந்தமைத்தே
செறிந்தகானத்துட்செல்லுவானெழுதருவேலை
மறிந்தபுள்ளினம்விலங்கொடுவான்படவொலிக்க
முறிந்துபோய்ப்படத்தருக்களுமுயங்கினகொடுங்கால். (உக)

வான்சுழன்றனசுழன்றனமலையொடுகடலும்
கான்சுழன்றனசுழன்றனவிருகதிர்கனவின்
மீன்சுழன்றனசுழன்றனமேதினிமுழுதும்
தான்சுழன்றுநல்லரையனுந்தருக்கினிற்கவிழ்ந்தான். (உஉ)

செய்தவெம்பிழையின்றியேசிறுநர்போலும்
பெய்தவான்மழையின்றியேபேருருமுழங்க
எய்தவந்தமற்றியாதெனவறிந்திலனிறையும்
கைதவங்கொலோகரவுகொலாமெனக்கலுழ்ந்தான். (உங)

விண்ணிருண்டனவிருண்டனவேலையின்பரப்பு
மண்ணிருண்டனவிருண்டனமாதிரமனைத்து
எண்ணிகந்தமீக்கோள்களுமிருண்டனவேந்தல்
கண்ணிருண்டனவிருண்டனகரணமுமனனும். (உச)

ஏங்கிவீழ்தருமேந்தலையிருகரத்தெடுத்துத்
தாங்கிநின்றநல்லமைச்சனுந்தளர்ந்துபின்வாங்க
ஓங்குவானமும்பூமியுமொடுங்குறவுயர்ந்து
வீங்குபேயெதிர்நின்றதுவிமலனைவிளிப்ப. (உரு)

சொருகிக்கண்ணிணைதுளக்கமோடிமைப்பறத்தூக்கம்
பெருகித்தன்னறிவழிந்தமன்பெரும்படிவீழ்ந்தான்
அருகித்திண்ணியதிறத்திடையமர்ந்ததவ்வலகை
உருகிச்சோர்தரவொதுங்கியமந்திரியுளைந்தான். (௨௬)

படுத்தவேந்தலின்பலன்களும்உணர்வையும்பரிவாய்க்
குடித்துநின்றதக்கொடுங்கழுதுயர்ந்தவன்றுணையும்
பிடித்தவாசையும்போய்ப்படப்புரண்டனன்பிணம்போல்
அடுத்தவாவியுள்ளடங்கினகரணங்களவிந்த. (௨௭)

அழிந்தநெஞ்சினனளப்பருங்காலங்களவனி
விழுந்தவாகிடந்தொழிந்தனன்மேலுறைந்திருந்த
கழுந்துமெய்யுணர்மடுத்தகங்களித்ததுகணம்போல்
ஒழிந்தநாட்களுமாதமுநாழியினுலந்த. (௨௮)

முடிக்கொழிந்திறைமுடங்கியவெல்லையிலொருகால்
துடிக்கின்மேற்கொளப்பேய்தவதுஞ்சியசூழ்ந்த
இடிக்குவாய்ந்தெனவமைச்சவனெய்தினன்கடுகி
ஒடுக்கிக்காதினுளுற்றதையுரைப்பமன்றுணர்ந்தான். (௨௯)

பதறலையகீபாழிமாற்பேய்தனைப்ப[illegible]ப்பச்
சிதறிநின்றநின்சிந்தையுஞ்செ[illegible]ரவிந்த
விதமறிந்துமெய்யுணர்வொடுவிறல்கொடுமுடுகி
உதறிமற்றதையுருண்டயல்போவழியுதைப்பாய். (௩0)

உதைத்தமாட்சியினுலைந்ததன்னிலையுணர்ந்தெழுமுன்
கதித்தடர்ந்ததன்கடிப்பொடுவலிபடக்கணைவாய்
உதித்தவான்முனரொருகிசியோடுமாறுன்முன்
எதிர்த்தயாவருமிறந்திலர்பிழைக்குநரியாரோ. (௩௧)

எண்ணியிப்பெரும்பிழைப்பறமொழிந்திவிலாரும்
அண்ணாவிடாருங்கலைபுரியிலிலொய்ந[illegible]
நண்ணிப்பேயினைநம்பியெனக்கிர்புனமெலிந்தக்
கண்ணின்மீதிடக்காத்தெறிபக்கழுங்கழுவி. (௩௨)

மார்பின்மீதொருமலையெனவலக்கையுமறித்த
வீரன்சண்டிருவிபுரிபிறழமுழுவிளைந்து
செருங்காலிலோவியிர்த்தபொடுத்துமுன்னெருக்கிச்
செருரத்திவிழுமைந்தனன்றிமைத்துத்தெறிப்ப. (௩௩)

எழும்புயவெந்தழுமேடியினிருகிலங்கிழிய
விழுந்தபேயினைவெட்டினனுரங்கொடுவிளிந்தே
ஒழித்தநெஞ்சபெலாநங்குமுன்றுறுபகுப்பிரண்டும்
பொருந்தியங்கடையன்டையிற்பொலிந்தகண்டயிர்த்தான். (௩௪)

வெட்டவெட்டநன்னிரொனவிரிந்துபிற்கூம்பத்
தொட்டுவாளிடுதுளைவளித்துளையெனமறைய
இட்டவிட்டவப்புழைவழியிருவிசும்பிடையே
வட்டவாண்மதிமுகிலிடைமறைந்தெனமறைந்த. (௩௫)

எழுந்தஞாயிறினெறிகதிர்பட்டவிரிந்தோடி
யொழிந்தமாசியொருபுடைமரநிழலொதுங்கி
விழுந்தகாலையின்மீப்படர்விதமெனவாளின்
அழிந்தகூறுகளலப்பிலமீண்டுருவடைந்த. (௩௬)

களைத்துவேந்தனுங்கையொடுமனஞ்சலித்தயர
விளைத்துமேற்றருங்கருமமொன்றறிகிலனெறுழ்வாள்
துளைத்தபுண்வழித்தோரையும்பொசித்திலத்துணித்து
களைதத்துண்டமுங்கலந்துடலாவகண்டயிர்த்தான். (௩௭)

அறிந்தமெய்த்துணையண்ணலையண்மியெம்மரசே
வெறிந்தபேயிந்தச்சாலத்தின்விழவிறல்கொடுமேல்
எறிந்துமற்றதன்வலிகெடப்பிணியெனவெடுத்து
முறிந்தநெஞ்சினன்மகிழ்வுறமுன்புகைகொடுத்தான். (௩௮)

வாங்கிமன்னுமவ்வலையினைவான்படவளர்ந்து
ஓங்கிநின்றவவ்வலகையினுச்சிமீயுயர்த்தி
வீங்குமெய்யெலாமொடுங்குறவீசிமெய்யுரவோன்
வாங்கியன்னதைச்சுருக்கினன்வலித்தனன்வலியால். (௩௯)

வலியொடுங்கினவொடுங்கினவான்படக்கறங்கும்
ஒலியொடுங்கினவொடுங்கினவொருகழுதுயிர்த்த
கலியொடுங்கினவொடுங்கினகாவலன்பகையும்
புலியொடுங்கியவனத்திறைபோகவுண்மதித்தான். (௪0)

திருக்கிழைந்தவவ்வலகையைத்திடங்கெடப்பிணித்துச்
சுருக்கியுற்றதோர்ஞெள்ளலிற்முடித்திடத்தூன்றிப் *
பருத்தமால்வரைப்பாறையப்படுகரின்வாயில்
இருக்கவிட்டவண்கழிந்தனர்இருஞ்சிலைவீரர். (௪௧)

(௩)

## மெய்வழிதொடர்ந்தபடலம்.

### வேறு.

மும்மையாம்பகைமுடித்தவேந்துமச்
செம்மைசேர்நெறிதெரித்தசெம்மலும்
விம்முநள்ளிருள்விரித்தகாவிடைப்
பொம்முநீள்புழைப்புறத்திற்போயினார். (௨௪)

---

* தூன்றி - வீழ்த்தி.

(௨௫)

இருளினுற்றதோர்கதிரினீறில்பொய்ப்
பொருளினுற்றவொண்பொருளொன்றுமென
மருளினுற்றவோர்மாசில்காட்சியில்
கருள்வனத்திடைக்கதியுந்தோன்றுமால். (௨)

பூதவாடியுட்பொதியுமொண்சுடர்
மீதுகண்படவிழிமழுங்குமா
கோதிலவ்வழிகுறித்தபாலகர்
ஏதில்தாரைகள்மழுங்கியெய்த்தன. (௩)

ஆதியந்தமுமழிவுமொன்றிலாக்
கோதிலாநலம்கொண்டகோமளன்
நீதிசேர்நயநிறைந்தநாட்டினின்
றோதமேயிவணொழுகிற்றேகொலாம். (௪)

இருணிறைந்தவிவ்வடவியூடுநற்
பொருணிறைந்தவன்புகழிற்பொங்கிய
அருணிறைந்தவனாற்றல்மீறியிக்
கருணிறைந்தநீள்வழியிற்கான்றதால். (௫)

இருமையின்சுகமீண்டுகோதையின்
பெருமைசேர்நிறம்பூத்தபேரருட்
டருமவாரியேதழைத்திந்நீள்புழை
துருவியிவ்வழிச்சொரிந்ததாமரோ. (௬)

பேசிலாங்கவள்பெற்றநற்றனி
மாசிலிந்தியமலிந்தசெய்கையிக்
கூசுசின்னெறிகுறுகிப்பாய்ந்ததாம்
பூசலுள்ளமேபூணாபூணையே. (௭)

ஞானமெய்யுடைநங்கைபாற்செல
வானமெய்வழியறிந்தயாமினி
நானநோக்குமோர்நோன்புநோற்றனம்
கானமேவியகூவலினீங்கினம். (௮)

கைத்தலத்தவர்காட்டுவாளொளி
மொய்த்தவொண்கதிர்முடுகியிவ்வழி
தைந்தகண்ணிணைத்தாங்குகிற்றிலம்
உய்த்துணர்ந்திலம்நெறியுமோர்ந்திலம். (௯)

சொன்னதோன்றலைச்சுமதிகைதழீஇ
மன்னமாழ்கலைவருதியிண்டெனுத்
துன்றுநுண்ணெறிதுருவிக்காட்டிட
[illegible]வாமமேமனந்துபோயினன். (௧௦)

மெய்க்கண்மூடியேவிமலன்பாலுறு
மெய்க்கணோக்கினர்மேவுநீண்மையிற்
கைக்கணங்குறுகண்டகம்பூதல்
தைக்குமியாவையுந்தடுத்துப்போயினார். (கக)

கண்ணமூக்குறுகானவண்பிலத்
துண்ணுழைத்தவிண்ணொளியின்வேறொரு
மண்ணுழைப்படுமசகுபோகலாப்
புண்ணிழைக்குறும்வெம்புதரிற்போயினார். (க௨)

காலிற்காவலர்கடந்துசெல்வழி
மேலுறுத்துமுள்வெம்மைபாற்றலார்
ஏலுமாநடையேற்றுப்பாந்தளைப்
போலுமூர்ந்துறப்போயினாரரோ. (க௩)

அதர்ப்புறத்துறுமரவுமங்கியின்
வெதிர்ப்புறப்புடைமூபிறும்வேங்களி
கொதிப்புறச்சுடுங்கொடுமைகண்டுளம்
கதிப்பமாழ்கிலார்கலங்கநெஞ்சினார். (க௪)

கமரின்வாய்ப்படுங்காலின்வெவ்விடத்
தமருமண்ணறன்னறிவுபோய்ப்படத்
திமிரமாவனந்திருந்துமோடதி
சுமதிகொண்டுடன்றாக்கினனரோ. (க௫)

ஆசலம்பலவடைந்தவானதர்
தேசிலங்கியநெறியிற்செல்வுழிப்
பூசலஞ்சிறைப்பொறிகொள்வண்டினம்
மூசலுந்தழீஇமுழைதிறந்ததால், (க௬)

விரிந்தவெண்வழிவெளிபுந்தோன்றின
பரிந்தநெஞ்சினர்பயமும்போயின
திருந்துமெண்ணமுஞ்செயலுந்தேறினான்
வருந்துமெய்ப்புயம்வளர்ந்தவண்ணலே. (க௭)

வேறு.

வட்காரொணக்காரொனத்தேர்ந்திருந்தாண்டுமாபாரிலை
வெட்காமலுள்ளம்வெறுக்காதிருந்தேமெலிந்தின்னலோ
டுட்காந்திமென்காவடைந்தேகவல்கொண்டிளைந்தோங்குநாள்
விட்கார்சொரிந்தேவிழுங்கூழெடுத்தாங்கென்மேலன்பளாய். (க௮)

பொல்லாதமாய்ப்பசாசம்புணர்ந்தாங்குபோகாமலே
நல்லாறுகாட்டிநயந்தோர்மனத்தந்தநன்வானுதல்
இல்லாளுனக்காயிருந்தாளிருங்குன்றினென்றேயிகல்
வல்லானைநூறிவழிக்கொள்ளெனச்சொல்லிவான்போயினாள். (க௯)

விடக்காரராவில்விடக்காருவாயின்விழுந்தேயிடர்
படக்காத்தளித்தாய்படப்பாம்பழுங்கும்பயன்கூறியே
தடக்கிழ்படத்தன்றடக்கையினேற்றித்தகர்க்காமலே
கடத்தானைபட்டுக்கடக்கக்கனிந்தேகனஞ்சொல்லினாய். (௨௦)

ஊனோடுரங்கொண்டுணர்வோடவென்னையுலைத்தேவிரி
வானோடுபூவும்வளர்ந்தேகதத்தின்வரும்பேயினை
தேனோடுதாரோய்செகுத்தேபிணிக்கும்திறன்கூறினை
யானெயுனக்கென்னிழைக்கேனெனத்தன்னகம்புல்லினான். (௨௧)

புல்லுண்டபொய்யாவமச்சுங்கரந்தேபுகழ்ழொன்றுமா
கல்லுண்டதோளான்றனுவிற்கலந்தேகறையொன்றிலார்
சொல்லுண்டமேலாம்பொருள்ளொன்னவுள்ளோசுரந்தூறினான்
அல்லுண்டகுஞ்சியளித்தாரிறையங்கயிர்த்தானரோ. (௨௨)

மலையார்மறப்பேய்வலம்பொய்முடங்கமடித்தாமென
நிலமாழவிட்டுக்குழிக்கேநெடுங்கல்லிறுத்தேகினும்
கலையானைநாடக்கடிந்தேதடந்தேங்கதங்கொண்டுடன்
தொலையாதருட்டப்பிணங்கொல்லணங்கிங்குசூழ்ந்தாமரோ. (௨௩)

பிரியாமலென்னைத்தொடர்ந்தேயிடர்காத்தபேரன்பினோய்
வரிபாயுமங்கட்கொடிக்குஞ்சிறந்தான்றன்வாழாருயிர்
மருவாயென்னெஞ்சத்தலக்கண்படத்துன்னிவாராயெனில்
தரியாதெனாவிதளர்ந்தேனுறந்தேன்றவிர்ப்பாயரோ. (௨௪)

---

## வரைக்காட்சிப்படலம்.

இன்னனபன்னியிரங்குவேலையேந்தல்
மின்னிடையின்றுவிரிந்தசோதியென்ன
துன்னினள்வந்துதுளக்கமுள்ளதீர
முன்னரிறைக்குஞ்செயல்விளித்தமூவாள். (௧)

மன்னனெழுந்துவணங்ககாதலுந்த
அன்னவள்பாதமணைந்தசென்னியானான்
பொன்னவள்வாரியெடுத்தணைந்துபுல்லி
என்னையென்னையுரைத்தவாறிசைக்கும். (௨)

[illegible]ழியடைம்மவாம்பிறழிகாலம்
[illegible]ழியெனின்சொலெற்றிக்கிலாதசெய்தாய்
[illegible]ழியினந்தநங்கைநிக்[illegible]ன்ன
வாழுமு[illegible]மெ[illegible]வந்[illegible]சாண்பாய். (௩)

நல்லியனின்னைநயந்தகாதனண்பன்
புல்லியபோதுபொலங்கொள்மேனிபுக்கான்
இல்லையிதிற்குமவற்குமின்றுதொட்டு
சொல்லிடவேறுமெனத்துலக்கவந்தேன். (௪)

மதியொடிணைந்தவலங்கொளாழிமன்ன
சிதைவிலையுன்றன்சிந்தைபுந்தியொன்ற
முதிரவளர்ந்தமுத்தமூரல்கூட
வெதிரினியொன்றும்இடுக்கணில்லையேகாய். (௫)

இவ்வழிசொல்லவுவந்தெழுந்தவின்பப்
பவ்வமமிழ்ந்துகளித்தயாழிமன்னன்
ஒவ்வியவுள்ளம்உணாப்பகாவிறெல்லா
வவ்வியகண்ணின்வருத்துரைத்துநின்றான். (௬)

நின்றவனுள்ளம்நிறுத்தமங்கைநேயம்
ஒன்றிடநோக்கியொடுங்கவும்பரோடும்
குன்றினிவந்தகுவட்டினுச்சிகாணும்
மன்றலளென்னமறைத்தகன்றுபோனாள். (௭)

எண்ணியதேறியியம்பலாமலேகிக்
கண்ணின்மறைந்துகரந்தளென்னகாறு
அண்ணலழுங்கியவண்ணகன்றுபோக
விண்ணினெழுந்துவிளங்குதிங்கள்கண்டான். (௮)

பிறந்ததொடர்ந்துபிறங்குநோக்கமில்லார்
சிறந்தொளிகண்டுகளிக்குமாறுசெம்மல்
கறங்கிருணின்றகணிப்பில்கானமெல்லாம்
துறந்துறுதிங்கள்தொடர்ந்தகண்டுவந்தான். (௯)

பகலிரவென்றுபகுப்பிலாதகானத்
தகலிலமென்னவயர்ந்தசிந்தையண்ணல்
சிகலறவிந்துதெரிந்தகண்டுதேடும்
சகலமுமங்குசமைந்தவாறுகந்தான். (௧௦)

முப்பகையுற்றமுருக்கியாடியண்ணல்
செப்பருகானந்தெரிந்திகந்துசேர
அப்பிடுகும்பமணங்குவானெடுத்தாங்
கொப்பவிருந்தவுதித்ததிங்களும்பா. (௧௧)

கண்டிறையுள்ளங்களிந்தகன்றுசெல்ல
வண்டிரைகானம்வளைந்தமன்றுபால்சேர்
தெண்டிரையாழியெனத்தெரிந்ததிங்கள்
விண்டகதிராக்கண்வியன்படிந்தவிக்கம். (௧௨)

ஆழியெறிந்தவலைக்குலங்களென்னச்
சூழமுலங்கணிலாவுடுத்தசூழ
கேழுருவும்பர்படக்கிளர்ந்தகுன்றம்
வீழுதிரைக்கண்மடங்குவெற்பையொத்த. (௧௩)

தெள்ளமுதொன்றுகுடத்தினின்றுசிந்திப்
புள்ளிவளைக்கண்பொழிந்தபெற்றிபோன்ற
ஒள்ளியதிங்களுகுத்தவொண்ணிலாவின்
அள்ளியகற்றையவிர்ந்தலம்பலன்றே. (௧௪)

கோழரைசந்தங்குளிர்ந்தசோலைபுக்குத்
தாழிரைதென்றல்தவழ்ந்துலாவிநிற்ப
வாழியெறிந்தவலைக்கணுற்றவோதை
போழவுளைந்துமளம்புழுங்குபூமன். (௧௫)

மேனியழுங்கவெதுப்புவெண்ணிலாவை
வானெதிர்கொண்டுமகிழ்ந்தமர்ந்துமாந்த
ஆனசகோரமழற்கொளுந்திமாயா
தேனெனவாய்ந்துதுணுக்கமெய்திநின்றான். (௧௬)

வெண்ணிலவுண்ணுசகோரமென்னமேலாம்
பெண்ணினகைப்பிற்பிறங்குகாந்திபெட்பிற்
கண்ணினிலென்றுகுடிப்பலம்மகாணு
வுண்ணிகழ்வென்றுரைப்பதென்றுளைந்தான். (௧௭)

நிற்சுடுநங்கைமுகத்தையஞ்சிநேரோ
எற்சுடநின்றவியக்கமென்னதிங்காள்
தறசெயல்மிக்குநரைப்பணிந்துதாழ்ந்து
சிற்செயலுற்றவரைச்செறுப்பர்நீயோர். (௧௮)

நாகநிமிர்ந்தவரைக்கணுச்சிநங்கை
பூகநிறைந்தமுகக்குடைந்தவுள்ளம்
சோகமெழுந்தவுரம்பிளந்துதூய
வாகமலிந்துகறுத்ததன்மையாயாய். (௧௯)

அன்றிலிரைந்தெனகந்துளைப்பவந்நேர
தென்றலுமொன்றுசெகுப்பவுற்றதிய
துன்றியகற்றைநிலாவுகுத்ததோன்றல்
கன்றியநெஞ்சுகரைந்திடாதுகாப்பாய். (௨0)

பொன்னவர்மேனிபொடிப்பவுற்றபூங்கை
என்னையடைந்துதொடப்பிழைப்பலெந்தாய்
துன்னவள்கூந்தலளைந்தசைந்துகாலே
நன்னயநிற்கென்னிழைப்பலம்மநானே. (௨௧)

வே று.

குழைந்தநெஞ்சினனிலையிணையணங்கிழைகுயின்மொழிகருங்கூந்தல்
பொழிந்தபொன்கதிர்ப்பிறைநுதற்பிடிநடைபொலங்கெழுகழைமென்றோள்
இழைந்தநுண்ணிடையுழைவிழிதுவரிதழிளங்கொடிதிருமுன்னர்
மொழிந்தெனுருயிரளிக்குநரொவரெனமுனைவனுமுளநொந்தான். (௨௨)

9

இருண்டகூந்தலம்பனிமொழியெழினடைக்கிணைபொருதிறங்காணு
வெருண்டமேகமுவெளிர்த்தனகிளிகுயில்விளித்திலவிரிதூவி
திரண்டவோதிமஞ்சேணகன்றொளித்தவென்றிறன்றெரிந்தினியாரோ
தெருண்டுசென்றயனுரைத்திவண்மீட்குதிண்ணியனெனநைந்தான். (௨௩)

தோதகம்மனம்பிரிந்தவண்டொடர்ந்ததுசூழ்ந்தனதெரிகில்லேன்
பாதகன்னெனத்தொடர்பொழிந்தினிதவர்பான்மகிழ்ந்திருந்தாமோ
சாதகம்மலர்க்குழலிடைப்படுமழைத்தண்ணறவதுமாந்தி
போதகச்சொலிமெல்லிடைமடந்தையைப்புணர்வழிபுரிவாயே. (௨௪)

இப்பரிசண்ணலுமிரங்கியவெல்லையினிருவுஞ்சேண்மறைய
மைப்படுகானமர்வண்டொடுபுள்ளினம்பல்லியவளங்காட்ட
செப்பிநிகிட்டிசையணங்கவள்வாண்முகஞ்சேர்த்திருகரத்தள்ளி
துப்பிடுபொற்பொடியொத்தொளிருற்றதுஅம்பரங்குணபாலே. (௨௫)

ஆதவன்பரிக்குரத்தெழுசெழுந்துகளம்பரமீதெழவே
ஓதவொண்கடற்பனித்துமிதெறிப்பனவுற்றவையுடன்கூட்டிச்
சீதமென்கமழ்குங்குமச்சேறெனச்சேண்மிசையெழில்காட்ட
மாதுகிட்டிசைநுதலுறுதிலகெனவயங்கினன்கதிரோனே. (௨௬)

விரிந்தசெங்கதிர்பரப்பியவிருநிலமேதகுபசும்பொன்னின்
திருந்துமாடையிற்பொலிவணந்திகழ்தரச்செம்மலுமயர்போய்முன்
இருந்தவொண்மணிக்குவட்டிடைத்தனியமர்ந்திருந்தொளிர்மடமானை
பரிந்துநோக்குறப்பரிந்தனன்போன்றதுபரிதியினுதையம்மால். (௨௭)

எழுந்தஞாயிறினிளங்கதிர்மிசைவிழவிசைகெழுபெருங்குன்றம்
பொழிந்தபொன்மணியுலமிவைபுடைபலபொதிந்தெழுகொழுந்தோடி
விழுந்தபாரொழுபுல்லுடன்மயங்கினவிரிபுனலிடைபோகக்
கழிந்தவோடையுங்காந்தினவொளிபலகவினமணிகொழித்தன்ன. (௨௮)

விரித்தவொண்சிறைப்பரப்பினிலிளங்கதிர்விரவியபசும்புல்லைத்
தரித்தமென்றனைத்திறன்றவதிகழ்தரத்தனிமணிப்பணிநாகம்
அருத்தியோடிளவெயிற்படப்படம்விரித்தாட்டயர்புரிகாலை
வருத்தமேலுறுமயிலகவிரித்தனமயங்கினதெரிந்தன்றே. (௨௯)

அடுக்கின்மால்வரையரைபுனைபொழில்கருமாடையினியல்காட்ட
தொடுத்தவொண்மலர்சரங்களிற்றுலங்கியதூமணிவடமார
விடுத்தமேகலையெனச்சிறந்தெழில்தரவீயினமிடுமோதை
கடுத்தகாண்மிசைப்பரிபுரங்கறங்கியகான்வரைவளமம்மா. (௩௦)

புள்ளிவாண்படுமுகிற்குலமறைதரற்புன்மைகணிறைந்தேறும்
கள்ளவாழ்க்கையினழிவிளைக்காட்டநற்கருமருளடையுள்ளம்
தெள்ளுஞானத்திற்றிகழ்ந்தெனத்தினகரன்செறிபனிப்படல்போக்கி
விள்ளுமாதிரமொருங்குறப்பரப்பினன்விழுங்கதிர்விரித்தம்மா. (௩௧)

படிந்தநுண்பனிபளிக்கரைக்குவடுறப்பூடர்த்தநுவழிந்தோடி
வடிந்தவாவிழுமருவிகள்வயின்வயின்வடங்களினியல்காட்ட
மிடைந்தவல்லிகளிலைபடுமரமிசைவிளங்குவவிரியாடை
தொடர்ந்தவொண்கொடிமருவியபரிசுறத்தோன்றியதடங்குன்றம். (௩௨)

தடிந்தநீரொழுமாவியந்தடவரைத்தனிமணிச்குவடோங்கும்
மடந்தைநுண்ணறல்மலர்க்குழற்புகட்டியநறும்புகைவளங்காட்டக்
கிடந்தசேக்கைநின்றெழுந்தவொண்குருகினம்கிளரொளிப்பகலோனை
அடைந்தவண்ணலின்புறுமணநயனுறவழைப்பனவெனலாகும். (௩௩)

விண்ணினின்றிழிமுகிலெனவேழங்கள்விரிமுழைவழிமுன்ன
அண்ணல்வாளரிமுழக்கொலியவித்தருமள்ளிருட்புழைதுன்ன
தண்ணறும்புனலருவிகளிடைக்கிடைதவழ்கரல்படிகஞ்சேர்
எண்ணில்மாவடம்புரண்டனவிலங்கினவிளவெயில்படிந்தேற. (௩௪)

கறுத்தசோலைநீள்கடலெனப்புனைதரக்கடறடிந்தெழுவானின்
உறுத்தவாவியின்படலங்களெழுந்தனவுறழ்ந்தனவளியீட்டம்
வெறித்தகாலலையலைத்திறத்தசைந்தனவிழுமியதழைமேலே
தெறித்துளாழ்படுதிரைவயினுரையெனத்தெரிந்தனமலரம்மா. (௩௫)

உலைக்கும்வெம்புலிமுழக்கமுமடங்கலினொலியுமற்றொருபவ்வத்
தலைக்குளாங்கெழுங்கலிப்பிணையிகலியவஞ்சிறைக்ககமெல்லாம்
தொலைக்குஞோடியபுனல்வழிநுலக்குனதொடுபுயனெடுங்குன்றத்
தலைக்கண்மேவியவிளங்கொடிமுகமதிதயங்கியநிலைகண்டான். (௩௬)

## கலைகாண்படலம்.

வேறு.

முன்கண்டதின்னுருவோமுகில்விண்டமின்னொளியோ
பொன்கொண்டமுடிவெற்பின்புடைபெயர்ந்தபொலிவேயோ
விண்கொண்டகதிர்க்கிரணம்விரிசிலையிற்றிருமினவோ
கண்கண்டெனுளங்கரந்தகதிர்வடிவமெனவயிர்த்தான். (௧)

கள்ளுருக்குநறுங்கோதைக்கனங்குழையாள்காவடைந்தென்
உள்ளுருக்கிப்பெருங்கருமத்தூக்கம்விளைத்துயரணங்காம்
தெள்ளமுதைத்தெரிதிழையெனத்திறங்கூறிச்சென்றனனீண்
டொள்ளாறுழைந்தொளித்ததுமவ்வொண்டொடியினுருவாமோ. (௨)

ஒண்டொடியினுருவாயினுறுந்துயரக்கடல்கடந்தேன்
விண்டதென்றனஞ்ஞானவியனிருளுமெய்வருந்திக்
கண்டபெருந்துயரொழித்தேன்காணுதாலம்பருகிக்
செண்டைமிளிர்விழித்துவர்வாய்க்கிளிமொழியைக்கிட்டினனேல். (௩)

ஊன்பட்டவெந்நோயுமுளம்பட்டமாதுயரும்
கான்பட்டவிடரனைத்துங்காணுதயான்களிப்பத்
தேன்பட்டகருங்குழலாள்திருமுகத்தாணுருவாகில்
நான்பட்டபெரும்பாடுநல்லனவுமாகாவோ. (௪)

என்னாவாமுருகியிருவிழியுமிமையகற்றித்
துன்னாவெயிற்பிழம்பைத்துருவியுளாந்திடன்பேணி
மன்னாதவொண்கருத்தைவான்குன்றின்முகட்டிருத்திப்
பொன்னாருந்திருமார்பன்பூவையுறுதிசைபார்த்தான். (௫)

பார்த்தளவிற்கண்பறிக்கும்பகலெறிக்கப்பொன்னுருக்கி
வார்த்ததெனக்கிளர்வடிவப்பாவையுமற்றவள்கரத்திற்
சேர்த்ததிருமணிவிளக்குந்திகழ்வனப்புந்திருக்குடையோர்
வேர்த்தகலும்வடிவேலான்விழிகளிப்பக்கண்டனனால். (௬)

கண்களிக்கவுளங்களிக்கக்கருத்துவகைக்கடற்படிய
விண்களிக்குமடநல்லாள்மெய்வனப்பின்விறல்வேந்தன்
மண்களிக்கமெய்வாழ்க்கையுயிர்களிப்பவருநாளில்
எண்களிந்ததெனக்களித்தங்கெமக்கிணையாரெனக்களித்தான். (௭)

வானேறுமொருதிங்கள்மறைமுகிலிற்றெரிந்தென்னத்
தேனேறுமலர்த்தருவினிடைதோன்றுதேமொழியின்
மீனேறுமயில்கூற்றம்வெள்கமிளிர்விழிபூத்த
கூனேறுபிறையொன்றுங்குளிர்முகத்தைநோக்கினனால் (௮)

உடுக்குலங்களொருகோடியுடன்மருவிப்பணிபடிந்து
தடக்ககனமதிற்றவழுந்தனிமதியினியல்காட்டிப்
புடைத்தருவின்புதுமலர்கள்புடைகதுவப்படர்கொடியின்
இடைத்தமியள்நிலையுணர்ந்தானிகல்முடித்ததனிவேலான். (௯)

உணர்ந்தவன்றனிருநோக்குமொண்டொடியின்றிருமுகத்திற்
புணர்ந்திலகவதுபூத்தபிணைநோக்குப்போர்வேந்தன்
இணைந்தவெழிற்புயத்தழுந்தித்திறப்படர்ந்தவிவர்நிலைமைக்
குணங்கழறுந்திறனறிந்துகூறுவதுங்கூடாவே. (௧௦)

வேறு.

வாகைகொண்டவென்றிவேந்தன்வாகைகொண்டுமீதெழும்
ஓகைகொண்டணைந்துநோக்கியுற்றவாவுரைப்பவே
மேகமுண்டுமிழ்ந்தவிந்துவில்லிணைத்தசம்பகம்
வாகினேடவிழ்த்தநீலமற்றிரண்டமைந்தரோ. (௧௧)

தொண்டையொன்றையொன்றெதிர்த்துத்தூவரும்புமாலதி
விண்டவற்றினுள்ளிருக்கவிட்டிரண்டுபக்கமும்
கண்டனுக்குபொற்பளிக்குக்கல்லிசைத்துமீதுற
வண்டரற்றுவள்ளைதொத்திவைத்தவன்னமாமுகம். (௧௨)

சங்கமொன்றிரண்டுவேயின்சூழ்விடுத்தசண்பகக்
கொங்குவிம்முகோதைவண்ணங்கொண்டவாகிரண்டுகீழ்
தொங்கலிட்டபங்கயத்ததொய்யலென்னமெய்யுணர்
மங்கைமென்கரம்பொலிந்தவண்மைசொல்லவாய்க்குமே. (௧௩)

மின்னையென்றமெல்லிடைவராலையென்றுவிம்முகால்
துன்றுதாமரைக்குலந்தொலைத்துலாவுமென்பதம்
கன்னலிற்கனிந்தமென்சொற்கன்னிவாண்முகத்தினை
மன்னனுற்றுணர்ந்துளம்மகிழ்ச்சிகொண்டுவிம்மினான். (௧௪)

இந்தமாதிருப்பிடமெனக்குரைத்தவ்வீறிலா
வந்தகானிடைப்படும்பகைப்படுக்கும்வன்மையும்
தந்தமாதின்மெய்க்கழல்தழைப்பநாளுந்தாழ்மைபோய்
எந்தம்வாழ்வுமங்கிடாதினித்தழைத்திங்கோங்குமே. (௧௫)

நீலயிற்கணித்திலத்திலங்கரும்புவெண்ணகை
காலலைக்கடற்றிரைக்கவர்ந்ததிங்கண்மாமுகம்
சாலவுற்றுநோக்ககிற்றிலாதுகண்கள்தண்பனி
ஆலிமுத்துகுத்துநின்றழிந்ததாரையாடியே. (௧௬)

இன்னவாவழுங்கிமெய்பொடித்துநின்றவேந்தலை
மின்னுவான்குவட்டுறைந்தமின்னுணர்ந்துமேவியோர்
துன்னுபூகமாமடல்துணித்துமாழையாணியால்
முன்னியுள்ளமுள்ளகீறிமொய்குழற்கணுற்றவோர். (௧௭)

சந்தமாலையொன்றுடன்றளைத்ததைத்திரட்டியோர்
பந்துமாவியற்றியங்கைபற்றியேயெறிந்தனள்
இந்துவானிழிந்ததென்னவேகிமன்னன்மார்புறச்
சிந்தையுட்களித்துநின்றசெம்மல்செங்கையேந்தினான். (௧௮)

எந்துகந்துகத்தினுற்றவோர்கொள்பூகமென்மடல்
காந்துமொண்ணெழுத்தறிந்துளங்கனிந்துகண்டனன்
மாந்தளிர்த்தமென்கரத்தின்மங்கையிட்டதாமெனத்
தேர்ந்துணர்ந்ததற்கணுற்றசீர்மையின்னசெப்புவான். (௧௯)

வேறு.

நீசெய்தவருவினையைநினைந்துணரின்னேர்மையுடன்
பூசெய்தபெருந்தவமோபுண்ணியமற்றெவனேயோ
தேசெய்ததிருவருளோதெருளுறயான்செய்நோன்போ
வாசெய்திமணமளியேன்மனங்களிப்பமன்னேறே. (௨௦)

வேறு.

நின்னைநாடியுயிர்நிலைதளர்ந்துநனிநெறியினுற்றகணிமிர்ந்திலா
வென்னைநேடியிவணெய்தவெம்பெருமவென்னமெத்தவமியற்றினேன்
உன்னதித்தனுவுமுறையுமாருயிருமுண்மையுண்மையினியோர்கணம்
மன்னநிற்கல்வரையேறிவந்தெனையுன்மார்பிலாரவினிமகிழுவாய். (௨௧)

வேறு.

நின்றலென்றன்நேர்மையுநன்றுநிலமீது
என்றுலோங்குந்திண்மைசெழித்தேயினிவாழும்
மன்றுவுன்னைவாழ்மரனென்றிவளர்வல்லி
யென்றுமேவிச்சார்ந்துதழைப்பானிடமாவாய். (௨௨)

வேறு.

நினக்குநேரொப்பாய்நீயேநேர்ந்தமுப்பகையைக்காய்ந்தே
யெனக்குநேர்நின்றுயென்பாலீசனுரளித்தவிஞ்சை
தனக்குமோர்பயனுண்டாகுந்தருணம்வந்தடைந்ததாமால்
மனக்குறுங்காமந்தீர்த்துமகிழ்வுறுமகிழ்ச்சிதாராய். (உ௩)

நின்னின்றுபிறந்தசீர்த்திநீள்விசும்புடையகோமான்
முன்னின்றுகருணைதூண்டமுருந்திளமுறுவல்பூத்து
மன்னின்றங்கேவல்செய்யுஞ்சுகவதிவதனநோக்கா
பொன்னின்றமேனியாளும்பொந்தனள்பூபநின்பால். (உ௪)

நின்னதுகவலையோர்ந்துநெறிவழிநிறுவத்துன்னும்
மின்னவள்தனக்குமுந்திமேவினளமிளிர்ந்தகண்ணின்
மன்னுயிரனைத்துநைவான்வல்வினையுருவாய்வந்த
நன்னுதற்பரத்தைநாளுநலங்கெடப்புணருந்தீயாள். (உ௫)

நின்கணுற்றுளத்தைத்தீயநெறியிடையிழுப்பான்வந்த
வன்கணாள்வஞ்சம்மாற்றிமன்னநின்மாசினெஞ்சை
என்கணேயிருப்பநாட்டியெதிர்படும்பகைகள்வீயத்
தன்கணுள்ளுபாயங்கூறித்தையலுமடைந்தாளென்னை. (உ௬)

ஏந்தனின்னெழிலுமாண்புமியம்பியேயிரும்பாருற்ற
பாந்தண்மாமதத்தயானையாழிமாவலகையாவி
மாந்திநேர்வழியைநாடிமால்வரைகுறுகிச்சார்வான்
காந்தனுநிற்கேயென்றுகனங்குழைகழறிப்போனாள். (உ௭)

போனநாண்முதலாநின்றன்பொற்புயந்தழுவும்வேட்கை
மானமாமரணைமாய்க்கமனந்தடுமாறிச்சாம்பித்
தேனுமார்கலிபுந்தென்றற்சேணிலாப்புயலுங்கந்தல்
கானமார்குருகுங்காயக்கலங்கினனலங்கற்றேளோய். (உ௮)

என்வயிற்கிடந்தவிஞ்சையாவுநின்னெழில்சேர்மார்பம்
தன்வயிற்பதிந்தபின்னர்த்தான்பயன்றருமேன்றேதித்
தன்வயிற்பிறந்தவென்னைத்தவழ்முகிற்றடச்சேட்குன்றத்
தின்வயினிருப்பச்செய்தானுலகெலாமீன்றவீசன். (உ௯)

பாரின்பால்விசும்பின்பாலும்பனிக்கடற்பரப்பின்பாலும்
நேரன்பாலுயிர்களாக்கிநிலைவழியளிக்குமேலோன்
யானொன்பானவன்றனாணையாவரோகடக்கவல்லார்
சானொன்பாலருளுற்றிந்தத்தடவரையிவர்ந்துமாதோ. (௩0)

என்றிவைபடித்துவேந்தனெழில்வரைக்குவட்டினுச்சி
நின்றவள்வதனநோக்காநேரிழைமுறுவல்பூத்து
மன்றலின்மாலையங்கைவாங்கினளெறியவானின்
ஒன்றியமுகின்வில்லொணமின்கொடியெனவுலவியன்றே. (௩௧)

நங்கைமென்கரத்தானின்றநாயகன்புயத்தைப்புல்லும்
பங்கியிற்களத்தைச்சுற்றிப்படிந்ததப்பழுதில்மாலை
மங்களம்வாணோர்பாடமன்னவீங்கணுகாயென்று
அங்கையினழைத்துப்போனாளவணகன்றணங்குமாதோ. (௩௨)

மண்வட்டப்பரப்பையெல்லாம்வண்மையிற்பொதுமைநீக்கி
வெண்வட்டக்குடைக்கீழாளும்வேந்தனும்விலங்கற்றோன்றும்
பெண்வட்டமுகமுமார்ந்தபடிவமுமொளியும்பெற்ற
கண்வட்டத்தடந்துக்காணான்கலுழ்ந்தகங்கரைந்துநின்றான். (௩௩)

## மலையேறுபடலம்.

கோவையார்தடக்குன்றிடைநின்றவள்
கோவையார்தடக்குங்குமச்சேறளைஇ
ஆவியாகத்தலம்புநல்லாரமுள்
ஆவியாகத்தடக்கையளித்ததால். (௧)

மங்கைமென்கைமரபிற்பிடித்தென
செங்கைபற்றியத்தேன்பொழிமாலையைத்
திங்களொண்முகத்தொற்றியஞ்சென்னியில்
துங்கமுற்றொளிர்தூமுடிசூட்டினான். (௨)

இருளின்மெய்வழிதேடியிளைத்தவர்
இருளின்மெய்வழியாய்ந்தறிவேற்றவர்
தெருளின்வான்கலைசேணிடைத்தேடுமா
தெருளின்வான்கலைச்சேணிடைநோக்கினான். (௩)

காட்டுமங்கைக்கனியெனக்காந்துயிர்
கூட்டுமோலையுழைக்கொம்புகூறிய
மீட்டுமீட்டும்வியப்பிற்படித்தவன்
நீட்டமுள்ளமலைநெறிநேடினான். (௪)

முந்தியிவ்வழிமோந்தவரின்மையால்
சிந்தையுற்றுத்திகைத்ததர்காண்கிலன்
தந்தியேயமுதற்சூலங்களோறுமப்
பந்திநோக்கிப்பரிந்தவனேகினான். (௫)

நிறங்கொள்மாப்பலவோடியநேர்மையின்
அறங்கொள்செம்மையவ்வண்ணலுமாய்ந்தனன்
மறங்கொல்வாய்மையிலாதவர்வாழ்வென
புறங்கொள்சோலையஞ்சூழலிற்புக்கவால். (௬)

ஓதுமோர்கணத்தொன்பதுபொய்யுரை
சூதர்நாவிற்றுலங்கியசோலைவாய்
மீதுலாவும்விரிநிழற்சாயலை
ஒதியுற்றங்கொளிர்த்தபுதுமையே. (௭)

பூணிறைந்தபுதுப்பிரசங்கொடு
தேனிரைந்துதெரிந்தடைசேர்க்கவே
தானருந்துமரிட்டந்தலைக்கொள
மானழிந்துமறிந்தனதும்பியே. (அ)

கபிலவாரணங்காகங்கள்தூதுணம்
கபிலவாரணங்காட்டெருமைமிசை
சபலமாகத்தயங்கியங்கூர்ந்திடச்
சபலமாகத்தனிக்களிப்பெய்துமால். (௯)

இன்னகண்டவ்விரும்பொழிலூங்குறும்
பன்னெறிக்கண்பகுத்தறிபான்மையில்
மன்னர்மன்னன்மனத்துளுமாய்ந்தனன்
மின்னும்வெற்பின்மிசைச்செலும்பாதையே. (௧௦)

இங்குமங்குமலைந்திளைத்தேந்தலும்
தங்கிநின்றுதவித்துளமாழ்கினன்
மங்கையுற்றமணிக்குவடேறுமோர்
சங்கையற்றதடமறியாமலே. (௧௧)

கட்பகட்டும்கடிமலர்ச்சாலையோ
டுட்பகட்டுமொருவழியுற்றதுள்
பெட்பினெய்திப்பெருந்தகைபோயினான்
கொட்பினோடிக்குறுகிமறைந்ததால். (௧௨)

மறைந்தகண்டுமனந்தடுமாறியங்
குறைந்தநீழலொதுங்கியிருக்கையில்
செறிந்தசெம்மயிர்க்குஞ்சியன்செங்கணன்
திறந்தவாயினன்திண்ணியதோளினன். (௧௩)

பிறைநிகர்த்தபெருங்கடைப்பல்லினன்
எறுழ்மலிந்தவிருட்கருமேனியோர்
கறுவரக்கன்கடுகியக்காவலன்
புறமடுத்துப்புயத்தைப்பிணித்தனன். (௧௪)

கோவுமங்கைகுலுக்கியெறிந்தயல்
தாவியந்தச்சழக்கன்கரம்பறித்
தாவியேங்கவுறைந்துநிலத்துநீ
யாவனீண்டென்னடைந்ததுகூறென. (௧௫)

சொன்னவந்தத்துடுக்கனுஞ்சோம்பனும்
மின்னெயிற்றுவிராக்கதனிங்குறு
மன்னர்பட்டுமடிந்தென்வயிற்றழல்
துன்னவிங்ஙன்சுகத்தினிருந்தனன். (௧௬)

என்றுரைத்தையெரிக்கவுனைக்குறோர்
மன்னரில்லைவரிசிலைமன்னனை
இன்னலின்றியிவண்விடுத்தேகெனச்
சொன்னகேட்டுச்சுடர்த்தனிவேலினான். (௧௭)

அல்லிருந்தவனங்களஞ்சுற்றிய
வில்லிருந்தமெய்க்காவலன்விசித்தெதிர்ப்
பல்லிருந்தபுரிவினையிவர்ந்துமேல்
நல்லிருந்தடநாடிநடந்தனன். (௧௮)

அறுத்தநின்றுகலங்கியசோலைவாய்
கிளையுயர்ந்தநெடுந்தடநேருறும்
வெறிக்கமலர்நகவிழ்மலர்விம்மியே
நெறிக்கமர்க்கொடிவழிகடந்தனன். (௧௯)

கருமுகிற்கட்கறங்குங்கிரொனை
முருகுருயிர்க்குமுகிழ்ம்மலைச்சோலைவாய்
மருவியுற்றவளங்கெழுபாதைமேல்
பரிவிறைற்றுப்பணிவளாயேறினான். (௨௦)

போருமக்குப்பொருதும்பரிதேறிடை
பூகமண்டுங்கமரினுணர்ந்திலான்
ஆகமண்டுமணவினமழ்தர
வேகமுந்தவெறும்பியுனர்ந்தனன். (௨௧)

மங்கையொண்மலர்மாலையைமன்னனும்
அங்கிவெங்கதத்தாக்குமென்றஞ்சித்தன்
செங்கைநீள்முடிசேர்த்தெடுத்தானது
பங்கமொன்றிலபார்த்துமகிழ்ந்தனன். (௨௨)

பூவையிட்டவிப்பூச்சுணராரமே
வாவும்வெங்கனல்மாய்ந்திலதாகலின்
ஆவியிட்டெனையாண்டவம்மொய்குழற்
பாவைகிட்டுறுபண்புமுண்டாகுமால். (௨௩)

இன்னபன்னிவிரும்மலர்மாலையும்
கன்னிமுன்னங்கரத்திருந்தோலையும்
சென்னிதன்னுமிகழ்முடியுள்ளுற
மன்னனிட்டுவைபத்தடைபூட்டினான். (௨௪)

பூட்டிவில்லைப்பொருந்தியதூணிடை
மாட்டியம்பின்மழைகொடுவாங்கெரி
யோட்டிமற்றவ்வுதணைத்தமைந்தவோர்
கூட்டினின்றுகுறித்தயலேக்கினான். (௨௫)

கரினிறைந்தகனியிடைக்காட்டிய
புரைனிறைந்துபுழுங்கியவெவ்வளி
விரியுமும்பர்விளங்கியமின்னுற
வெரிபடர்ந்திங்கெழும்பியநேர்மையே. (௨௬)

வானெறிந்துவளர்ந்தவரைத்தடத்
தானெறிந்துதனிக்கனியுள்ளுறு
மூனெறிந்தங்குலையவுரத்தெழுங்
கானிறைந்துகனலிற்றகர்த்ததால். (௨௭)

அகடுகீண்டங்கடர்ந்தவிருந்தையின்
தகடுகிண்டுதனிக்குகைமேலுறும்
முகடுகிண்டுமுரிந்துசரிந்தயல்
விகடுநீண்டுவிளைந்தனகண்டனன். (௨௮)

பரவியந்தப்பனிவரைமீதுலாம்
அருவியந்தவலங்கல்வெடித்தவாய்
துருவியோடித்துமிக்கச்சுடுங்கனல்
ஒருவமன்னனுளஞ்சிறிதோங்கினான். (௨௯)

சுசியிவர்ந்துதொலைப்படுசூழல்வாய்
வசையின்மன்னன்மனம்மறுகிக்கலை
இசையுங்கூட்டினிருந்திறும்பூதின்மேல்
விசையினேறிவெளிப்படுவேந்தனும். (௩௦)

கீழடர்ந்துகிளர்மரக்காடெலாம்
தாழவும்பர்தனிப்பருதிக்கனல்
வீழநொந்துவெதும்பியுளைந்துமேல்
பாழிமன்னனபரிந்தினிதேறினான். (௩௧)

பாறையென்னப்படர்ந்துருவட்டின்மேல்
ஊறிமத்தினுலமொருயோசனை
காறுநின்றகடும்பகல்வெம்மையின்
கூறுகண்டுகுலைந்துவிழுந்ததால். (௩௨)

வானிடிந்துவிழுந்தெனவான்பனி
தானிடிந்துதலைப்படத்தோன்றலும்
ஊன்படிந்தபரிசினொதுக்கமுன்
கான்படிந்துகலக்குவகண்டனன். (௩௩)

அலக்கணுற்றங்கயர்ந்தறிவோனனி
கலக்கமுற்றகணத்திற்கடிந்தவண்
இலக்கமற்றவிருளார்நெருங்கினார்
வலக்கொண்மன்னைவடங்கொடிறுக்கினார். (௩௪)

புலையரந்தப்புரவலன்பொன்முடி
தலையினின்றுதருக்கினெடுத்தவர்
தலைவனென்னத்தயங்கியவெம்பணைச்
சிலையன்சென்னிதிருந்தவணிந்தனர். (௫௫)

வேறு.

இனையனநிகழ்வேலையிகலொழிநெடுவேலான்
தனையுணர்ந்துறுபீழைதளர்ந்தவனுளமாழ்கி
அனமருணடையாள்அணிமலரகிலாரம்
புனைமுடியுடன்போகப்போகிலதுயிரந்தோ. (௫௬)

ஆர்த்தவனொளிங்கேயாவனொன்றயல்நோக்கிப்
பார்த்தனன்புடைசூழும்பாதகர்படையண்ணல்
வேர்த்தனனிறையுள்ளம்வெருண்டனனிதழ்கவ்வி
ஈர்த்தவன்கயிறெல்லாம்மெறிந்தனன்சினந்தம்மா. (௫௭)

எட்டினனிகல்வேலையெதிர்படுவரையெல்லாம்
கொட்டினனுயிர்வீயக்குறித்தொருகதைதாங்கிக்
கிட்டியவொருகாலன்கேளெனவெதிர்முந்தும்
துட்டனையுரத்தாடுநுனைத்துடன்பிடித்தன்றோன். (௫௮)

தோள்களையொருநாணிற்றுணுக்குறப்பிணித்தோடும்
தாள்களைவடங்கொண்டுதளைந்தவன்றலைமேவும்
வாள்கெழுமணிமோலிவாங்கினன்சிரம்பூண்டு
மீள்பவனவனோக்கியாவனிவிளம்பென்றான். (௫௯)

வழுக்கனென்பெயரீங்குவைகியென்றமரோடு
அழுக்குனருறவாற்றினலைத்தவர்பொருள்வவ்வும்
இழுக்குடையிருள்வேடரியாமெனவிகல்வேலான்
கழித்தவன்விடுத்தேறிக்கனவரைமிசைப்போனான். (௬0)

கருதியபொருளொன்றைக்காண்டருமெனவுள்ளம்
பரிவினிலுறுபோதுபார்த்திமுன்பறிந்தென்ன
விரிபனிபடுசூழல்வீந்ததென்றுணர்முன்னம்
மருவியபடிமென்மேல்வளர்ந்ததுபெருகும்மால். (௬௧)

இன்னனபலதாண்டியிறைவரையிவர்வேலை
துன்னியபனியீட்டம்தொலைந்ததுசுடர்மாலி
பொன்னிறன்னிழல்காலப்புதுமைகண்டுளம்பொங்கி
யென்னிதுநிலையென்னவிருங்களிப்புடனேக. (௬௨)

நீளமாமலைசூழும்நீர்படுகமஞ்சூல்கொள்
காளமாமுகில்வெற்பின்கான்மிசையெனக்காண
கோளுலாம்பெருவானிற்குளிர்மதியெனவெய்யோன்
நாளுமொண்கதிர்வீசநாயகன்மகிழ்கொண்டான். (௬௩)

மருவிமால்வரையும்பர்வருடைவாம்பரிசேரின்
பருதிவானவன்றேரூர்பரியினைர்படக்காட்டி
விரைகுலாங்குளிர்சந்தவிரிபொழிலிடைபோதல்
அருதிறந்தடங்காறுதலைவனபோன்றம்மா. (சச)

மங்கைவாண்முகநோக்கிவந்தநாண்முதலும்பர்
தங்குவான்கதிர்மேலைத்தடங்கடலிடைமூழ்காக்
கங்குல்யானறிந்திலேன்கடலெழூஉ்திரைகவ்வும்
திங்களீங்குறுதன்மைதெரிந்திலன்றிறனென்றான். (சரு)

அரவுரியனைமபாடஅணிமயில்பலமேவும்
விரைசெறிபொழிலெண்ணில்மீமிசைத்தொடர்ந்தேறி
நிரைமணிச்சுடர்காலும்நெடுவரைமுடியொன்றி
ஒருமதிற்புறஞ்சூழும்உறையுளினிலைகண்டான். (சசு)

கண்டனனிறையுள்ளாங்களிந்தனன்கடிசூழல்
உண்டொருகயமுற்றுள்ளுநவகையிற்குடைந்தாடிப்
பண்டவள்தருமாரம்பரிவுடனணிமார்பிற
கொண்டனினிதநதக்கோயிலின்வழிகொண்டான். (சஎ)

மேலவன்செலும்வாயின்வெயிலவரொருகோடி
போலவொண்சுடர்முந்தப்பொழிலிடைப்படர்மின்னின்
சாலமென்னெழில்தோன்றித்தவழ்ந்தெதிர்வரஞேக்கா
மாலகன்மனத்தானும்வழிமிசைவிரைவுற்றான். (சஅ)

## திருமணப்படலம்.

பூங்கொடியினைங்குமிடைப்பாங்கியர்கைதாங்கிவரப்புகலலாது
மாங்குயில்களோவ்குபொழில்நீங்கியயல்வாங்கல்தரவளங்கொள்கேழின்
வெங்குகலைச்சோங்குகிழற்பாங்குறடைநற்றூங்கல்விடவிரிவிரேடி
யாங்குமுமிழ்தூங்குசுடராங்காகொம்றாங்கு கலையன்னமின்றாளே. (க)

விண்டவரியுண்டமையுளண்டிநனிக்கெண்டைமிளிர்விழியினுளே
அண்டமுறுகொண்டல்மதித்துண்டமெனக்கண்டவொளிர்அளிகத்தாளே
மண்டுமலர்க்கொண்டைமுதற்கண்டுகவலுண்டிலையென்மருங்கினுளே
சண்டையிடுதண்டையணிவண்டுமுரல்புண்டரீகச்சரணினாளே. (உ)

ஆடுமயிலாடுகொடியாடுபரியாடுமனமன்னமானர்
நாடியதரோடிமலர்தேடியிடவூடுசெலுங்கைநாளும்
பாடுமிசைபாடுமனம்பாடுகுயில்பாடுகிளிப்பாவைமார்கள்
கூடியித்தோடினிதிற்பாடிவரக்கூடினள்மைக்குழலினாளே. (ங)

மாதரளிதாதனைஇநற்கோதைமலரூதுகுழன்மங்கைமார்கள்
வாதமுறநாதமணைகீதமுடன்போதரவொண்மணியினேங்கு
தீதில்விளக்காதரவினேதுமிசைத்தாதியர்கள்செங்கைதாங்க
சீதநறுமோதநிறைபூதகடங்கோதையர்கைத்திகழவந்தாள். (ச)

மோதுமலையொன்றையெதிர்மோதுமலையென்னவவர்முதிர்ந்தகாதல்
ஓதமுரமுந்தவுயிருண்டிலையென்றேறுதுவணமுலைந்துளேங்க
காதமபின்மாக்கணிலைகாதலவர்கொண்டுவகைக்கடலினுழத
தீதிலவரோதுமுளந்திதிலகல்கீள்விழியிற்செப்பினாரோ. (௫)

கண்கொடுநுகர்ந்துமலர்க்கண்கொடுபுகன்றுகுழைக்கண்ணளாவும்
கண்கொடுதொடர்ந்துமனக்கண்படும்புணர்ப்பறியுங்காதலார்கள்
எண்படுபகற்கணவரொண்பட்டுளத்துறையுமெண்ணமியாவும்
பண்புடனுணர்ந்தவர்கள்பண்பினையுரைக்குமொழிபன்னலாமே. (௬)

இந்துநுதல்சிந்துகதிர்முந்துவனப்பந்திகழலளறிந்துவீச
தந்தமறைச்செந்துவரச்சந்திபடுமந்தரனிற்கைந்துலாவ
அந்தவிழிபுந்தியன்மெய்விந்தமெனத்தொந்தமலையமுந்தியூன்றத்
தந்துவெனமைந்தவிடைநொந்தலையவந்தவன்மெய்தழுவினாளே. (௭)

புல்லவெதிர்புல்லநரியொல்லவிடமில்லையெனப்புனிதனோடு
நல்லவெழில்வல்லியெனச்செல்லியவள்தில்லிலகநலங்கொள்மார்பில்
எல்லவனுள்வில்லெனச்செவ்வல்லியகத்தல்லியெனவிழைந்தூறும்
சொல்லரியவெல்லையினற்றொல்லைநயமெல்லவெழுந்தூங்கினாளே. (௮)

கம்பலையிட்டம்புகடல்பம்புவணநம்பியுளங்களிப்பினேங்க
கொம்புமவனம்புமனவம்பியணைதம்பமெனக்குலாவிமாரன்
அம்பழலின்வெம்பியழிநம்புவிதையும்பொழவமுதவாரி
கும்பநிறையம்படுவெண்கம்பியெனவம்பொனகைகொழித்திட்டாளே. (௯)

பையவரிற்செய்யநிறக்கையினணைதையலிளம்பசலைமேனி
அய்யனிருகையினுளனையவுறுமெய்யுணர்விலனங்கன்வாளி
செய்யுமொருவெய்யவபர்பையவிடவுய்யும்வகைதெரிந்துகூந்தல்
மொய்யளிகள்தொய்யலுறமெய்யினவள்மெய்யணவழுங்கினானே. (௧௦)

வேறு.

இவ்வணநெடும்வரையிருந்தபின்னரம்
மைவணக்குழன்மடமானுமாறுந்தம்
சைவணமானதுகைகோத்துக்கண்படும்
அவ்வணுற்றடிபெயர்த்ததரிற்போயினார். (௧௧)

குவளைகண்மலர்ந்தனகுமிழம்பூத்தன
தவளமுமரக்கலர்தழைந்துகாட்டின
நிவளநன்மதிப்பனித்துவலையிற்செழும்
துவளுமென்முகத்தினிற்சொரிந்தமுத்தமே. (௧௨)

நூபுரமுழங்கினநுசுப்பின்மேகலை
வாய்படுமணிகளும்வளையுமார்த்தன
தூபமென்நறுங்குழல்சோர்ந்தவிழ்ந்தன
சாபவொண்முகத்தியர்தவழ்ந்துமொய்க்கவே. (௧௩

ஐயநுண்ணிடையவரகன்றமென்கரத்
துய்யவொண்சிரமிசைதோன்றல்சூழ்வளி
செய்யவெண்கயத்திடைச்செருத்ததாமரை
பையமென்கொடியொடும்பறித்தபோன்றதால். (கச)

துவரிதழ்மடந்தையர்சூழ்ந்துவெண்கதிர்
கவரிகளசைத்தனர்கால்செய்வட்டமும்
இவர்மதிக்குடைகளுமிணையவேந்திமேல்
அவிர்விழிப்பிணையனாரயலிற்போயினார். (கரு)

தோகைகள்நடித்தனதூவியார்த்தன
சாகைகள்தளிர்த்தனதடங்கொள்வாழ்பொழில்
ஓகையினுயிர்த்தவொண்முறுவலொத்துமேல்
வாகுறுநறுமுகைமலர்ந்துகாட்டின. (கசு)

நிலையினிலிருந்தவந்நெடியவான்மரத்
திலைகளும்மகிழ்ந்திசையெடுத்துப்பாடின
கலைமுதல்விலங்கினங்களிப்பினாழ்தர
தொலைபடுவனமெலாந்துள்ளியோடின. (கஎ)

வான்சுடர்குளிர்ந்திளமதியம்போன்றது
தேன்பொழிநெறிமிசைத்தேறல்ஞான்றது
கான்மலருகுத்ததுகமழுமென்பொடி
மீன்மிளிர்நெடுங்கணாள்விமலனோடெழ. (கஅ)

தடவரைக்குடுமியிற்றமனியத்திழை
வடவரையெனவுயர்வலங்கொள்மாளிகை
சுடரொறியினமணிகுயிற்றித்தூயதோர்
படர்திவிதடவுமோர்பைம்பொன்மண்டபம். (கக)

துன்னினரவணரிசுமந்துதூமணி
மின்னியதவிசினின்விரைமென்கூந்தலார்
மன்னையுமணங்கையும்வகையினேற்றியே
பொன்மலரடிமிசைபொழிந்துவாழ்த்தினார். (உ0)

இன்னனநிகழ்வையினிசல்விசும்பிடை
மின்னியவணமொருவிளங்குஞ்சோதியின்
அன்னவர்விழிமழுக்கடையவாய்முனம்
நன்னயச்சுகவதிநாடினாளரோ. (உக)

எழுந்தனரிறைமுதலிருந்தயாவரும்
விழுந்தனரொதிர்கொடுமேவிமெல்லடி
தொழுநதொறுந்தொழுந்தொறுஞ்சுகத்தின்மூழ்கினார்
வழிந்தகண்ணீர்பெருவாரியாட்டினார். (உஉ)

வேழமென்பிடியொடுவிளங்குமாறடி
தாழுமவ்விறலவற்றழுவித்தையலோ
டேழியும்படவிறையோங்கியொண்புகழ்
வாழுதியினியெனமரபின்வாழ்த்தினாள். (௨௩)

கலையிணையணைத்தவள்கனிந்தமென்கரம்
இலைநுதிவேலினானிடங்கொள்பாணிமேல்
அலைகடல்முழக்கெனவரிவையர்குழாம்
கலகலவொலிசெயக்கடிதினேற்றினாள். (௨௪)

ஆந்திறனறிந்தியானறைந்தவாற்றினை
ஏந்தனின்சுகிர்தம்யாரியற்றினாரினி
மாந்தளிர்நிகர்ந்தமெய்ம்மடவரற்புரி
காந்தருமணத்தினிற்றனிநறுதோய்குவாய். (௨௫)

அணங்கிவள்வயிற்படுமளவில்விஞ்சைகள்
குணங்கெழுவவளிடைக்கூட்டிவாழ்குவாய்
மணங்கமழ்மலரினிவ்வஞ்சைதன்னொடு
இணங்கினின்றிடைவிடாதிருத்தியென்றனள். (௨௬)

நேசமோடின்னனநெறியிற்பன்னியே
பாசிழையணங்கவள்பரிந்துபன்முறை
ஆசிகள்பொழிந்துமேலகன்றுபோயினாள்
பேசிலரிருந்தவர்பேதுற்றாரரோ. (௨௭)

வே று.

தெளிந்தவேந்தனுங்கலையுமத்தெரிவையின்னுரையும்
ஒளிந்தவாறுங்கண்டுறுகனவொழிந்தெனவுணர்ந்தார்
அளிந்தசிந்தையராற்றுவரரியமற்றவர்பால்
விளைந்ததுய்த்தவர்வேண்டியங்கெதிர்செயவெளிதோ. (௨௮)

மன்னுமாம்பனன்மலர்மிசைமலர்படிந்தென்ன
முன்னினின்றவள்வாயிணைமுத்தமிட்டுவப்பின்
நின்னையென்னுழையளித்தவந்நேரிழையன்றோ
அன்னையாண்டவளென்மகிழ்ந்தகங்குழைந்தறைந்தான். (௨௯)

விம்மியின்னனவேந்தனும்வியந்துரைவிளம்ப
பொம்முமொண்குழற்பூவையும்புன்னகைவிளைத்துச்
செம்மல்மாதிரம்பொலிந்தவத்தேவழிப்படுவார்
இம்மியும்பிசகாரறனென்றெதிரிசைத்தாள். (௩௦)

செஞ்சொன்மேலவருகினிற்சிரங்கரங்கூப்பும்
வஞ்சிபோன்றிடைமாதர்கள்வரிசையிற்கொணர்ந்த
அஞ்சசேர்நறுந்தயிலமிட்டாய்வளைக்கரத்தால்
மஞ்சனந்தனியாட்டினர்மங்கலம்மறைந்து. (௩௧)

திருந்துமாடையுமணிகளுமுறைமுறைதிருத்திப்
பொருந்தவண்ணலும்பூவையும்பொலிவுறப்புனைந்து
அருந்துமுண்டிகளாறுகுணம்பயப்பனவமைத்துப்
பரிந்தமங்கையர்பலநயம்பணித்தனருவந்தார். (௩௨)

கரத்திஞெண்மணிக்காந்தியிற்கண்வழுக்கடையத்
தரித்தசெம்மலர்க்கொடியெனத்தயங்குமக்கலைமான்
பருத்ததோளிளமன்னவன்பாணிகைப்பிடித்து
அருத்தியோடரியாசனத்திருந்தனவன்றே. (௩௩)

பொறியின்வாய்பொழிகீதமும்பொன்மதிமுகத்தார்
அறிவினேரிசையமுதமுஞ்செவிவழியருந்தி
விறலின்மேலவனிருந்தழிவிரிதிவிப்பகலோன்
மறையவாங்கவன்கலைமுகநோக்கிமன்வழங்கும். (௩௪)

மங்கைநின்பொருப்பலைமிசையுற்றவன்றளவாய்ப்
பொங்குவானினின்றெழிந்திலன்புழுங்குவெங்கதிரோன்
துங்கவான்குவட்டுயர்ந்திலனசூழ்ந்தலைந்திருநதான்
மங்கைஞெணிதென்வருத்தமாமலர்க்குழலென்றான். (௩௫)

வாழுமாருயிர்மன்னகேள்வடதிசைமருவ
கேழுந்திங்களுமருக்கனும்தென்றிசைகெழுமும்
சூழுந்தாரைகள்பழையனவொழிநதுயர்த்துன்னும்
பாழிமாதிரத்திடைபலநவவொளிப்படலம். (௩௬)

ஒன்றிரண்டுபல்மாதங்களொருபகலாக
நின்றுவான்கதிர்பரப்புவன்நெடும்பகற்குரியோன்
துன்றிமீத்துருவம்தொலைபடத்தொலைந்தவன்சுருங்கி
இன்றுதென்றிசைநெறிப்படவெழுந்தநள்ளிருளே. (௩௭)

இருளெழுந்துமிங்கிருளிலையிலங்கொளிப்படலம்
மருவியாங்கணுஞ்சுடர்க்கதிரோற்றித்தனமயங்கும்
துருவுவான்பொறிக்களவிலையுதிர்வனசுழலும்
பொருவில்மாதரைச்சுழற்சியிற்பொருந்துமிப்புதுமை. (௩௮)

இனையசொல்லியங்கிருந்தவர்க்கடைக்கணிற்றெனவ
அனையர்மங்கலகானங்களப்பிலமுழக்க
இணையிலாமணிவிளக்கங்களெடுத்தனரேந்தல்
துணைகொடாடொழுகெழுந்தருள்புரிகெனவெழுந்தான். (௩௯)

தூரியம்பலதுவைத்திடத்தூவிதழ்மடவார்
சாருமங்கலகீதநற்சதிமுறைவழங்க
நேரும்பூரணகும்பங்களெடுத்தனர்நெருங்க
வீரன்முன்மணிவிளக்கங்களேந்தினர்மேவ. (௪0)

கலையின்மென்கரங்கனிந்தவன்பிடித்துமுன்னடந்தான்
சிலைகொள்வாளிகள்திகழ்தருமதிக்குலந்திரண்ட
அலையின்கம்பலைகடுத்தனவரிவையரமளி
நிலையில்மாணெடுமொழியலினிறைந்தனர்தொடர்ந்தார். (௩௧)

மூலகந்தத்தின்சிவிறிகண்முறைமுறையசைய
வாலிருந்துகில்பரப்பினர்வழிமுனர்மருவ
நீலவொண்கணார்நறும்பனிநீரிறைத்தேக
கோலவேல்விழிக்குயிலுமங்கொழுநனும்போனார். (௩௨)

பளிக்குவொண்டளாநீர்ப்பெரும்பழுவத்திற்காட்ட
ஒளிக்குமாமணிக்குட்டியத்துறுநிழல்கதுவல்
துளிக்குங்கீழ்க்கடல்பரப்பினிற்சூரியனுதிப்ப
முளைக்குஞ்செங்கதிர்க்கற்றையின்முயக்கினையுறக்கும். (௩௩)

பவளவேதிகைத்தூணொடுகொடுங்கையும்பதிந்த
தவளமாடமுங்கூடமுந்தனித்தனிகடந்து
துவளுநித்திலவடங்களிற்றுலங்குமச்சூழல்
குவளையொண்கணார்மணவறைகுறுகினர்குவிந்தார். (௩௪)

குருகினுண்ணியதூவியுங்குளிரிலவுதவும்
மருவுமெல்லியதூலமும்வரிசையினடைந்த
அரியபஞ்சணைச்சேக்கையுமடக்கியிவ்வுலகிற்
பொருவிலாவிடம்பொலிதருமணவறைபுகுந்தார். (௩௫)

காரணன்படையுயிரொனக்கடுப்பினிற்கறங்கும்
வீரணங்கெழுவிசிறிகள்வெறிவளிவீசத்
தோரணங்களில்வெயிலிடுசுடர்மணிதுலங்க
வாரணம்படுநுரையெனவயங்கினவமளி. (௩௬)

முக்கனிகளுமோதகவகைகளுமுதிர்ந்த
மிக்கதேன்களும்பானத்தின்விதங்களும்விரவி
நக்கபொன்மணிக்கலங்களிற்றனித்தனிதயங்க
மைக்கண்மெல்லியர்வைத்தவணகன்றனர்மறைந்தார். (௩௭)

மணங்கொண்மஞ்சணைமீதரம்மகிபனுண்மகிழ்வால்
கணங்கொள்கிண்கிணிமேகலைகறங்கிடக்களிப்பின்
நுணங்குகேள்வியர்நுண்பொருளறிவழிநுடங்கி
யணங்குசெய்யிடைதழுவியவ்வணங்குடனடைந்தான். (௩௮)

நாரங்கவாருதிதனிலெழுமமுதெனத்தழையும்
ஆரங்கவெண்மதிநிசியிடைக்கொழிநிலவென்ன
இரங்குகூகிரிலெழுமுகிற்படலங்களென்ன
உரங்கொடன்னவருளத்திடைவளர்ந்தவொண்வேட்கை. (௩௯)

வரையொடுங்கியமார்பமும்வான்கிளைவளர்க்குந்
தருவின்வீங்கியவாகுவுந்தனிக்கொடைக்கரமும்
மருவலார்மனநிலையினைமருவுமம்மருங்கும்
தருமமென்னமேற்றழைத்தெழுந்தனிமயிலொழுங்கும். (௫௦)

சரிதத்தோடிடைமிடைதருநயனமுந்தனிக்கோல்
விரதத்தோடிடைமிடைதருதலையும்மெய்யுணர்வோன்
சரதத்தோடிடைமிடைதருமிதையமுந்தனிமான்
சுரதத்தேமனந்தூண்டிடமுறுவலித்துயர்ந்தாள். (௫௧)

களவநானமும்புனுகுமெய்கமழ்தரப்பூசி
தளவவொண்மலர்த்தாமமுங்கலன்களுஞ்சாற்றி
அளவினுண்டிகளாவனவருத்திமென்குதலைக்
கிளவியோடிறையுவகையிற்கெழுமிவீற்றிருந்தான். (௫௨)

காமவல்லியங்கற்பகத்தருமிசைக்கவியும்
மாமைமேவிளவல்லியுமன்மணிமார்பிற்
ருமமென்னவேதழைந்திடத்தனித்தனிதழுவி
காமவெஞ்சமாரடினரயர்ந்திலர்களித்தார். (௫௩)

அன்றிலோசையுமளிமுரலோசையுமரிய
தென்றலோசையுந்தீங்குழலோசையுஞ்செவிவாய்ச்
சென்றுகாதலம்பயிர்நனிவளர்த்திடத்தெவிட்டா
மன்றலோதியுமன்னனுவளர்நலமயின்றார். (௫௪)

வாட்கணங்கையுமன்னனுமருவினரிருந்தார்
நாட்களும்பலகழிந்தனநவையிலங்காதல்
வேட்கையும்மிகப்பெருகியகணந்தொறும்விளங்கி
வாட்கையுந்தவநன்கெனமதித்தனன்மதியோன். (௫௫)

நீருநீருடனொன்றியநேர்மையினிகழத்
தேரும்பாலுடன்றேன்கலந்தன்னதிற்றிருந்த
சேருஞ்செவ்வியத்தெரிவையுந்திறன்மலிந்தவனும்
ஆருமார்வமுமகமுமற்றொன்றெனவமைந்தார். (௫௬)

நவ்விநோக்கியும்பகலவனள்ளிருளகற்றும்
செவ்விவாய்ந்திருகருணையுந்திகழ்தரச்சிறந்தான்
அவ்வியம்புகாவகத்தவனவனடுவுருமத்
தெய்வவாளொளிதிரண்டெனத்துலங்கினன்செழித்தான். (௫௭)

கள்ளமென்பதின்பெயரையுமறிந்திலர்கருத்தின்
உள்ளயாவையுமொளித்திலருரைத்துளங்கனிய
விள்ளுமேம்பொருள்மெய்ம்மையுமிருவரும்விரவிக்
கொள்ளும்வானலங்கொண்டனர்குளிர்ந்தனருவந்தார். (௫௮)

இருவர்நோக்கமுமெண்ணமுமினிவரனுடும்
இருவர்கோரியவின்பமும்விழைவுமற்றெவையும்
இருவர்காதலுமேக்கமுமின்னுடலுடலின்
மருவியோங்கியவுயிருடனொன்றெனவளர்ந்தார். (௪௯)

நம்பிநங்கைதனல்லுயிர்க்குயிரெனநயன்றான்
கொம்புமன்னவல்லியினைக்கொண்டனள்குறித்த
இன்பம்யாவுளவிழைப்பெனத்தேர்ந்தனரிழைக்கும்
இன்பமேதமதின்பெனவிருந்தனரிசைந்து. (௫0)

## உலாவியற்படலம்.

பிடியளந்தநுண்ணிடையவள்பேரொழிற்குரிசில்
நெடியவொண்கரந்தழுவினள்நெடுமலைப்பரப்பும்
படியும்வானமுநோக்குதிபல்லுயிரளித்த
நெடியவன்றிறனொருவழிநோறிநிறைந்தோய். (௧)

தெருளளித்தனனளித்தனன்றெரிதகுபாடை
பொருளளித்தனனளித்தனன்புகரொழிவழியை
இருளகத்திடைக்கடிந்தகற்றீர்ங்கலையுணர
வருளின்யாவையுமளித்தனனாதியாமமலன். (௨)

பகுதியுள்ளிடைப்படுதொழிலனைத்தையும்பகுத்து
மிகுதிகொண்டதன்மெய்யறிவிளக்கினிற்றுருவித்
தொகுதிகொண்டொளிதூயவைபுலப்படப்புதுக்கல்
தகுதிமாந்தரின்தன்மைக்குத்தரங்கெடறகவோ. (௩)

தந்தையிட்டதோர்வெறுக்கையைத்தாழ்வறப்பெருக்கி
நிந்தைவிட்டநன்னெறியினிற்றுய்த்தவையோம்பா
மந்தமைந்தரின்மாண்புநம்முன்னவர்வழியே
தந்தையாவையுந்தவநனிதழைக்கிலாத்தகைமை. (௪)

மறைந்தகத்திடைமலிந்தகக்கரணிதம்யாவும்
நிறைந்தஞானமாங்கசைகொடுநிமிர்தரப்புடைத்து
உறைந்தநீர்சலித்துருகிடக்கதிர்கொடுவுறுத்தும்
அறைந்தமாலியினகல்தரப்புரிகுவதடவால். (௫)

சொடுத்தமீப்பொருளனைத்தையுங்கொடுமையிற்சிதற
விடுத்தபாதகர்விளிதருவெந்துயருழல
அடுத்தலுக்கத்தினனவையறிவொடுபேணித்
தொடுத்தலூகியஞ்சுவைத்தலுந்தூயவருழே. (௬)

பணிப்படுந்துளியிடையிலும்பரவுநீர்ப்பவ்வப்
பனிப்பரப்பிலுமுருவமைந்தொளிருவன்பகலோன்
கனிப்படுந்தருவகத்திலுங்கான்விலங்கறிவு
கனிப்படும்மனுவுளத்திலுங்கரந்துளனீசன். (௭)

நிலவுகுக்குமொண்முறுவலினிழல்புடைகதுவக்
குலவுதேனுடனமுதமுஞ்சொரிந்தெனக்கொழித்த
சொலவிலீசனல்லருளேயும்வலியையுந்துலக்கி
உலவியெங்கணுங்காட்டினனேனைக்கினனுரவோன். (அ)

வேறு.

தோமறுவளையினைச்சூழ்ந்தகானலும்
தேமலர்முல்லையுஞ்செறிந்தவேலியும்
பூமலர்வாவியும்பொழிலுஞ்சூழ்தரு
காமுறுபூவலேகடலுங்கண்டனன். (கூ)

கான்வளமிகலுவமுகிலுங்கண்படு
வான்வளமிகலுநீர்மல்குராடெலாம்
ஊன்படுமுடலுமுள்ளுயிருங்கூடுமா
கூன்கடன்ஞாலமுங்கோவுங்கூடுமால். (க0)

உடுவினைநோக்கும்வானுயர்ந்தசோலையின்
படுவிதழ்ப்போதினைப்பார்க்கும்பாரிடைக்
கொடிதவழ்வெண்முகிற்குலங்களேயெனப்
படர்தருபுனல்வழிபார்த்தயிர்க்குமால். (கக)

நீனிறப்படாமிசைநிரையிற்றீட்டிய
தூனிறவுருவங்கள்பளிங்கிற்றேன்றுமா
வானிறைப்பொலிதருவளங்கடாங்கொலோ
ஊனமில்பாரிடைஉறைந்தவென்னுமால். (கஉ)

வேறு.

பொறைமுடிக்கொளுமக்கினிக்கொழுந்துகள்புடைப்ப
வுறுதடிக்குலத்துடன்மயங்கொளிதரவுயர்வான்
பெறுமிடிக்குரல்பூமியின்கம்பலைபிறங்க
திறன்றெரிநதிலன்தெருமரலுற்றனன்றிறலோன். (கங)

கானரும்பொழில்கவினுபுகருமுகிற்கூட்டம்
மீனவானிடைப்புடைபெயர்ந்தகல்தரமேலோன்
ஊனமிற்றருத்தொகுப்பதோவுறுதிரைசூன்கொள்
வானதாங்கொலோபெயர்ந்தெனவியந்துடன்மயங்கும். (கச)

மகரவேலையில்வயங்கொளிமீனங்கள்மிளிர
பகருவானிடைச்சுடரிமிழுடுக்கணம்படர
நிகரிளங்கதிர்நிலவியநேர்மையைநேராய்
புகரில்சிந்தையன்பூரணன்றிறத்தினைப்புகழும். (கரு)

அகிலம்யாவுநீயண்டநீயண்டத்துள்ளுறையு
நிகிலஜீவன்கணீயவையியங்கியநிலைநீ
புகலுவானினும்பூவினும்பொலிதருபுதுமை
இகலினின்புகழிருக்குமாவியற்றியதெனுமால். (கசா)

வண்ணமாண்புனைபாவையைமறைகயிரிணைத்தே
யெண்ணுமாறவையாடிடவியக்குனனுறழக்
கண்ணகன்றபல்லுலகமாங்களரியிற்சீவன்
உண்ணுழைந்திழையோய்விலாவாடலினுவப்பாய். (௧௭)

ஒருதுளிப்புனலுள்ளிடையோங்கிவாழுயிர்கள்
கருவுயிர்த்துநாட்கழிப்பதுகணக்கிலைகாண
உருகமுற்றமூவுலகினிலெங்கணுமுலவும்
பெருகுமின்னுயிர்பெற்றலகாப்பதேபெரிதால். (௧௮)

அஞ்சுபூதத்தின்வயின்வருமாருயிர்த்தோற்றம்
மிஞ்சவேதருமாக்களின்மிகையிதுவென்றால்
அஞ்சில்வாணிடைத்தூயவணிணிதிருநதோங்கும்
எஞ்சில்போகமற்றின்னதென்றுணருமாறெவனோ. (௧௯)

கண்ணகன்றவிஞ்ஞாலத்திற்கண்கவர்வனப்பில்
உண்ணுமார்செவியுவந்திடவொழுகுபல்லிசையின்
நண்ணுநாட்டினருறுவரிந்நலமெனினுதன்
விண்ணினாட்டின்சீர்விரித்தினிப்பகருவதெளிதோ. (௨௦)

அன்னங்கண்படுதண்பணையளியினமுரலும்
பொன்னந்தாமரைப்பொய்கையும்பூவிரிகாவும்
இன்னமேழ்வகைத்தோற்றமுமிற்றகைவேட்கை
மன்னுமாந்தருக்குறுத்துமேல்வானெவன்செய்யா. (௨௧)

நிலையின்மேதினியின்பமுநிலையிலயாக்கை
நிலையில்வாழ்க்கையுநிலையில்வாழ்வுறுநாளும்
நிலையிலைம்புலநுகர்ச்சியிந்நேர்மையவென்றால்
நிலையிலும்பர்வாய்நிலைத்தவர்நுகர்சுவையாதோ. (௨௨)

இன்னவாறுமன்னியம்பியேமெய்ம்மயிர்பொடிப்பத்
தன்னுணர்ந்திலன்றெரிந்திலன்றாழ்குழற்றையல்
சொன்னதன்செவிமடுத்திலன்றூபரபரன்றாள்
உன்னிநின்றனனசைவிறந்தோவியமுறழ. (௨௩)

வேறு.

நின்றவேந்தலைநிழல்செய்கூந்தலாள்
ஒன்றுநெஞ்சுறவுவந்துபுல்லியே
ஊன்றுகாதல்மீச்சொரிந்ததாமென
மன்றமெய்ப்பொருண்மாற்றங்கூறுவாள். (௨௪)

பாரும்பாரிடைப்படுவயாவையும்
நேருமாலகினிலையோடொக்கமன்
ஓரினுண்ணருந்துகளும்மாணுமால்
ஒரீசனுக்கியாவுமன்னவே. (௨௫)

மாசிலுள்ளுடைமன்னகேணம
தீசனீள்புகழேற்றற்கேல்மொழி
பேசவில்லையாற்பின்னராங்கவன்
நேசமேவநாமிழைத்தனேரரு. (உசு)

அய்யன்றண்ணளிக்கணித்தயாமவன்
றுய்யபொன்னடிசூடித்துன்னுறும்
வெய்யகாமமால்வெருளியோட்டிமேற்
செய்யதூவழிதெரிந்துதேடியே. (உஎ)

உலகமியாவையுமுயிரின்பேதமும்
நிலைகொண்மாந்தருநேரவாங்கவர்
உலைவிலாவினையொழுக்குமூக்கமும்
கலையுமுள்ளவாகண்டுமேலரோ. (உஅ)

கறறவார்கதிர்காட்டுமிச்சுடர்
சுற்றியாங்கணுந்துருவுசூழ்ச்சியால்
முற்றயாவையுமுணர்திமோய்ம்பிருய்
இற்றுநின்றதிவ்வுலகமுய்வழி. (உகூ)

துன்னுகாட்சியுட்சூழ்ந்தவற்றிடை
இன்னநல்லவென்றேற்றுளுட்டவை
நன்னயந்தரநாட்டிநாட்டவர்
மன்னுசீர்கொடுவானுமேவுவாய். (௩0)

வெள்ளமன்னநம்விமலனல்கிய
கொள்ளையாம்பயன்கொண்டயாமனக்
கள்ளமின்றியேகாட்டுகட்டளை
யுள்ளசெய்வதேயுதவிமாறென்ருள். (௩க)

விண்குதித்தெழும்மிரதமூர்ந்துமேல்
தண்கடற்புனைதன்ாயினுற்றவை
கண்களிக்கவேகாட்டுவல்லிடை
யொண்கல்வெற்புளவுவந்துநோக்குவாய். (௩உ)

இணையநல்லுரையியம்பிக்காதலன்
கனியுமுள்ளமேகவர்ந்துலாவிமேல்
புனையுமார்வடமென்னப்பொச்சையின்
சுனையினுற்றிழியருவிதோன்றவே. (௩௩)

## நீர்விளையாட்டுப்படலம்.

வேறு.

பொன்னந்தோரணத்துறைந்தபுதுமணம்
துன்னுமின்னமுதொக்கலத்தொன்மலை
மின்னுமொண்குவட்டுச்சியின்மீதொரு
நன்னறும்பயவாவியைநாடினார். (க)

மாதர்மென்கலைவல்லிநன்வாண்முகம்
தீதில்வெண்மதிகண்டுசிதைந்துளம்
கேதமீறக்கிரணஞ்சுருக்கியம்
மாதிரப்புழைவைகினபோலுமே. (உ)

நடக்குடைந்தன்னளினப்புனலிடைக்
குடிப்புகுந்ததெனக்குலவோதிமம்
நடுக்கநீர்நடுக்குற்றதந்நன்னுதற்
சுடர்க்குமஞ்சித்துவள்மதிபோன்றதால். (௩)

சுருட்டுமென்றிரைச்சூழலிற்றென்மலர்த்
திரட்சிநீரின்மறைவதிச்சேயிழை
மருட்டுமைவிழிவாய்கரங்கால்களால்
வெருட்சியுற்றுண்மிடைந்தனபோன்றவே. (௪)

போர்த்தவஞ்சிறைப்புல்லொடுமோதிமம்
நீர்த்துறைக்கயனீங்கவுநேரிழை
யார்த்தநூபுரத்தோடவண்கூவியே
பார்த்ததூவிபழிப்பனபோன்றவால். (௫)

புனையுமாமயிற்பூவையும்பேரொழில்
புனையுமாமயிர்ப்போன்றுநற்பூபனும்
கனையரிக்கொணற்காவிறந்தங்குறும்
கனையரிக்கொணறுஞ்சுனைகண்டனர். (௬)

பிடியுமானையும்பொற்றடம்போந்தெனப்
பிடியுமானையும்போன்றிடைக்கண்ணுடை
கொடியுமாற்றருகொண்கனுபொய்கைவாழ்
கொடியுமாற்றிக்குளிப்பவிறங்கினார். (௭)

பொங்குவெண்டிரைப்பொய்கையின்மேவிய
துங்கத்தாமரைத்தூமுகையன்னதின்
பங்கஞ்செய்நுதிமூக்கிற்பரிந்தறத்
தங்குதேறல்ததும்பவருந்துமால். (௮)

கொட்பினெய்துகுலப்பகைவென்றறி
பெட்பினுக்கும்பெரியரிப்புள்ளினில்
விட்புறத்துவிரும்புநறுஞ்சுகம்
உட்புலத்தறிந்தோங்குவொன்றனள். (௯)

குறுகிவண்டுகுளக்கமலத்திடை
மறுகுதேனைமடுப்பனநோக்கென
மறுவில்சீவர்மனக்கமலத்திடை
நிறுவுமொண்பொருள்நேர்குவவொன்றனள். (கo)

கெண்டைமீன்களும்வள்ளையுங்கேடிலா
புண்டரீகமுமாம்பலும்பூவைநின்
உண்டகண்முதலாகவுறுப்பெலாம்
கொண்டுகூடக்குளிப்பவைகாண்டியால். (கக)

நாடுநாட்டமுதற்றருநற்பொறி
கூடவொன்றுமனமுங்குறிக்கொளும்
வீடுகாட்டுமம்மேலவனின்குணத்
தாடல்மாக்கடலாவதென்றுளரோ. (கஉ)

தாழுந்தாமரைத்தண்கழுநீருடைத்
தாளும்பானலந்தாண்முதல்வல்லிகள்
நாளும்வாடிலநன்மலரேந்துநின்
கோளில்யாக்கைக்கொடியின்மயங்குமே. (கங)

அள்ளலுற்றெழுமங்கொடிநீர்மிசை
விள்ளலுற்றதென்மென்மலரேந்துமப்
பள்ளமுற்றபடியிற்பிறந்துவான்
உள்ளன்றுண்மலரேந்துவருத்துமர். (கச)

தாளினள்ளறடிந்துந்தலையிடை
நாளுமொண்மலர்நல்குவகாண்டியாய்
கோளினன்னகுணங்கொடுகொற்றவா
நீளறத்தின்னிலைதரியென்றனள். (கரு)

காணிலத்திற்கதுவக்கலையென
மேணிரைத்தெழுமேம்புனல்சூழுமேல்
வானிறத்தநறுமலர்வாய்ந்தநின்
பூநிறத்தபொலிவிற்றயங்குமால். (கசு)

பூவினின்றுபொருள்படவாழ்குநர்
மேவுமானுடர்மேல்நசையாடையாக்
காவல்கொண்டுகருணைக்கடற்பதம்
பூவினோங்கிப்பொலிவையுளத்துநீ. (கஎ)

வல்லிநின்கண்மறுள்வீழிவானெழில்
புல்லமுந்துகல்லாரம்புதுமையின்
எல்லைநீலத்துடன்மயக்குற்றவோ
சொல்லும்வாயிறதுடைநதங்கொளிந்தவோ. (கஅ)

ஆயகேளென்னுறுப்பிற்றுலங்கிய
சாயைகொண்டமலரினறகைமைபோல்
பாயுமீசன்படைத்தபகுதியில்
மாயையுண்டதைமாற்றுவர்மாண்புளார். (௧௯)

தூவியன்னமெனத்துவணங்கையும்
ஆவல்கொண்டவளையனுமாழ்ந்தநீர்
வாவியாடிவளங்கெழுமாமலர்
காவினுற்றகருதித்தொடர்ந்தனர். (௨௰)

## போதுகொய்படலம்.

வேறு.

மருப்பினுற்றுமைவனக்
உதிர்த்தமுத்தமொத்தகர்க்
கதிர்த்தபுட்பங்கண்டுளாம்
குத்திக்கொளக்குறுகினார். (௧)

மானுஞ்சீயமானனோர்
மானும்மானுநோக்கவே
மானமோடமங்கியே
கானமேகரந்தவே. (௨)

முக்கனிகளொடுமுதற்
தக்கநேர்தருக்கள்வாய்
உக்கதேனுடன்பரீஇ
மிக்கவேபயின்றனர். (௩)

மன்சுவைத்தமாங்கனி
யின்சுவைத்ததென்னவே
மின்சுவைக்கமெல்லிதழ்
தன்னினுய்த்துவந்தனன். (௪)

கொம்புமென்கைகொண்டதோர்
செம்புநாவல்தேரிகழ்
இன்பநேரதிர்தவந்
நம்பிவாயினோர்ந்தனள். (௫)

வனம்பழுத்தவன்கனி
கனித்தவாயயின்றுதேன்
மனங்களிப்பமாந்தியே
இனம்மலர்க்கொய்யேகினார். (௬)

மரம்படர்ந்தவஞ்சிமே
ளிரம்புமென்மலர்க்கொளா
வரம்படர்ந்தவொண்கணாள்
கரந்தரக்களித்தனள். (௭)

துளியடுத்ததூமலர்
களியடுத்தகாதலோ
டளியடுத்தருந்திமேல்
புளிஞரிற்புறஞ்செலும். (௮)

மன்னுரைத்தவார்த்தைகேட்
டென்னுரைத்தியேந்தனி
நன்னலத்தைநாடுவார்
துன்னியுற்றசூழுவார். (௯)

தோகையுன்றன்றாமலர்
வாகைகொண்டவாழ்கழல்
ஆகமுண்டசோகலர்ந்
தோகையினுயர்ந்ததால். (௧௦)

நாதநல்லமாண்பினார்
தீதிழைத்ததீயர்பால்
மீதிழைத்துமேனலம்
ஆதரத்தினுள்குவார். (௧௧)

மங்கையுன்றன்வாணிழல்
தங்கவீறுசண்பகம்
கொங்குபூவுறக்குளிர்ந்
திங்குநின்றிரட்டுமால். (௧௨)

பெருந்தகைத்தபெற்றியார்
விருந்தடுத்துமேவுமுன்
அருந்தியுற்றகங்குளிர்ந்
திருந்தெதிர்ந்துபோற்றுவார். (௧௩)

அகங்கடந்தவன்பினீ
முகந்திருந்திநோக்குமுன்
நகஞ்சொரிந்தநாண்மலர்
சுகம்மயர்க்குஞ்சொல்லினாய். (௧௪)

அறம்வளர்க்குமன்பினோய்
நிறம்வளர்க்குநேயமுள்.
திறந்தரச்செழித்தலால்
புறம்பறிந்துபோகுமோ. (௧௫)

வல்லியுன்றன்வாணகை
முல்லைகண்டுவெண்முகை
ஒல்லையினுயிர்த்தவால்
தொல்லைநின்றன்றோழிசொல். (௧௬)

மறங்கடந்தமாண்பினாய
அறங்கிடந்துள்ளாறினார்
புறங்கடைபுகாதமுன்
நிறம்பொடிப்பநேர்குவார். (௧௭)

மகிழுமின்சொல்வாணுதல்
இகழுமுன்றன்செவ்விதழ்
மகிழிடைச்சுவைப்பவான்
முகிழ்விரிந்துமொய்த்ததால். (௧௮)

குதலையின்சொல்குந்தளை
மதலையன்னைமாடுபோய்
திதலையேர்ந்தகொங்கைவாய்
புதையமெய்பொடிக்குமால். (௧௯)

இராவணத்தவின்கையிற்
குராவினைக்குனிக்கவே
விராவியெங்குமென்மலர்
தராவிருந்ததையலே. (௨0)

சொல்வலுற்றதூய்மையோய்
நல்லவிந்நகந்துணை
கல்விதந்தையைமகன்
புல்லமெய்பொடிக்குமே. (௨௧)

இத்தகைத்தவின்மொழி
முத்தமூரனமூட்டினாள்
சந்தமக்தவத்தவன்
புத்தியிற்பொருந்தினாள். (௨௨)

வேனில்வேளைமானுமக்
கோலுங்கொண்டலோதியும்
கானமார்ந்தகண்மலர்
தானுங்கொய்துதாங்கினார். (௨௩)

நங்கைநின்றனள்ளிருள்
பொங்குகூர்ந்தற்பொம்மலிற்
றுங்கியாளிறைக்கவிக்
கொங்குவிம்முகோதைசேர். (௨௪)

இந்தவாறிறைமகன்
கந்தநாறுகாரிகை
சிந்தைவேண்டுதேமலர்
தந்துமெய்தழுவினான். (௨௫)

பொன்னுமுற்றபொன்மலர்
மன்னன்மார்பிலாரமாத
துன்னவேதொடுத்துமேல்
மின்னலின்விளங்கினாள். (௨௬)

தீதிலாதசிந்தையார்
காதலுட்கனிந்துமேய்
மீதெழுந்துவெண்ணகைச்
சோதியிற்றுலங்குமால். (௨௭)

வேறு.

மலையின்வாணலம்வைகலுவரிசையினோங்கிக
கலையுமண்ணலுங்காதலங்கடலிடைக்களித்து
உலைவில்காலங்களோடியவுயர்நலம்பருகி
தொலைவில்விண்ணுறுமிதுனத்திற்றுலங்கினர்தூயோர். (௨௮)

இருந்தவாணுதலிறைவனையானத்தினேற்றித்
திருந்துபூவளந்தெளிவுறத்துருவியஞ்சேணில்
பொருந்துகோளொடுமண்டங்களேமுதற்புலத்திற்
கரந்தநெல்லியங்கனியெனக்காட்டினவுரைப்பாம். (௨௯)

வாழிமேதினிவானகம்படுபலவண்டம்
வாழியாங்குளமன்னுயிர்படைத்தவைவளர்க்கும்
வாழிவான்பரன்றாளிணைவார்கழற்குரிசில்
வாழிபொன்கலைவஞ்சியுமறங்களும்வாழி. (௩௰)

முற்றிற்று.

---